# உள்ளுறை

பக்கம்

# நூன் முகம்

இக் காலத்தில், நமது நாட்டிலுள்ள எல்லாப் பாடசாலைகளிலும் அறிவை அபிவிருத்தி செய்யக்கூடிய சாஸ்திரங்களை மாத்திரம் கற்றுக் கொடுப்பது போதாதென்று கருதி, எல்லா மதத்தினர்க்கும் பொதுவான அறங்களையும், நீதிகளையும் கற்பிக்கவேண்டு மென்கிற அவா பலருக்கும் உண்டாயிருக்கின்றது. ஆகலின் யான், ஆங்கில பாஷையில் எழுதப்பட்டுள்ள பலவித நீதிக் கதைகளை நமது மாணவர்கள், உபாத்தியாயருடைய உதவியின்றித் தாங்களே தெரிந்து கொள்ளுதற்குரிய எளிய இனிய செந்தமிழ் நடையில் நீதிக்கட்டுரைக் கோவை யென்னும் இந்நூலை எழுதியுள்ளேன்.

நீதிகளைக் கதைகளின் மூலமாகப் பிள்ளைகளுக்குக் கற்பித்தல் மேலான முறை யென்பதை பலரும் அறிவார்கள். பெரும்பாலும் நமது நாட்டில் வழங்கி வருகிற பற்பல நீதிகளை அநேக வருஷங்களால் சிறுவர்கள் கற்று வருகின்றனர். கற்றதையே திரும்பவும் கற்பதில் சிறுவர்களுக்கு ஊக்கம் குன்றிவிடுமாதலின், அங்ஙனம் நேராது புதியனவாயும் உருசிகர முள்ளனவாயும், மனத்தில் ஊன்றுவனவாயுமுள்ள விஷயங்களாக் கற்று, புத்தியைப் பரவச் செய்ய வேண்டுமென்கிற கருத்துடனே இந்தப் புதிய கதைகள் வசன நடையில் எழுதப் பட்டுள்ளன.

வி. ஞானதிக்க

# நீதிக் கட்டுரைக் கோவை

## 1. ஜீவகாருண்யம்

இங்கிலாந்து தேசத்தில், டேர்பிஷைர் (Derby-shire) என்னும் ஊரில், முன்னொரு காலத்தில் பிளாரன்ஸ் நைடிங்கேல் (Florence Nightingale) என்னும் பெயருடைய மாது ஒருத்தி இருந்தாள். அவளிடம் எல்லா நற்குணங்களும் நிரம்பி இருந்தன. அவள் கடவுளால் படைக்கப்பட்ட எல்லாப் பிராணிகளிடத்தும் நேசம் வைத்தமையால் அவைகளில் ஒன்றுக்கும் அவள் தீங்கு செய்யமாட்டாள். அவ்வாறே அவளிடத்தில் மனிதர்களுக்கும் மற்றப் பிராணிகளுக்கும் நேசம் மிகுந்திருந்தது.

அவள் வசித்த ஊருக்கு அருகிலிருந்த ஒரு கிராமத்தில், ரோகர் (Roger) என்னும் பெயருள்ள வயோதிகன் ஒருவன் ஆடு மேய்த்து வந்தான். அவன் தினந்தோறும் ஆடுகளை மேய்ப்பதற்கு ஓட்டிக்கொண்டு போகும்பொழுது, ஆடுகளைக் கொடிய மிருகங்கள் கொன்றுவிடாதபடி பாதுகாக்க அவனுடன் நாய் ஒன்று போவது வழக்கம். ஒருநாள், பிளாரன்ஸ் தன்னுடைய தோழியுடன், ரோகர் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருக்கிற வழியாய்ப் போகும்பொழுது, அங்கு நாயைக் காணாமல் ரோகரைப் பார்த்து, "உன்னுடைய நாய் எங்கே? அது ஏன் இங்கு வரவில்லை? அதற்கு ஏதேனும் இடையூறு நேரிட்டதோ?" என்று கேட்டாள். ரோகர் அதனைக் கேட்டு "ஐயோ, நான் என்ன செய்வேன்? என்னுடைய

நாய் இனிமேல் எனக்குப் பயன்படாது. அதைச் சீக்கிரம் கொன்றுவிட வேண்டும்" என்று சொன்னான். பிளாரன்ஸ் அதைக் கேட்டவுடனே மனங்கலங்கி ரோகரை நோக்கி, "ஆ! உன்னுடைய நாயைக் கொன்று விடவேண்டும் என்று எண்ணுகிறாயா? அப்படியானால் நீ எவ்வளவு கொடியவனாக இருக்கவேண்டும். ஏன் அதைக் கொல்லவேண்டும் என்கிறாய்?" என்று கேட்டாள்.

ரோகர் "எனக்கு அது ஒரு தீங்கும் செய்யவில்லை. ஆனால், ஒரு துஷ்டப் பையன் அதன்மீது கல் எறிந்ததனால், அக் கல்லானது அதன் கால்களில் ஒன்றில் பட்டுக் கால் ஒடிந்துவிட்டது" என்று அழுதுகொண்டே சொன்னான். பின்பு பிளாரன்ஸ், தனது தோழியுடன் அந்த நாயைப் பார்க்கும் பொருட்டு ரோகர் வசிக்கும் இடத்திற்குப் போனாள். அங்குப் போனதும் பிளாரன்ஸ் நாயைக் கூப்பிட்டாள். அது, தனது வாலை ஆட்டிக் கொண்டே மெல்ல நொண்டி நொண்டி அவளிடம் வந்தது. அவள் அங்கு உட்கார்ந்து அதனைப் பார்த்து அதனிடத்து இரக்கங்கொண்டு, அதன்உடம்பு முழுவதும் தடவிக்கொண்டிருந்தாள். அப்பொழுது அவளுடைய தோழி, அந்த நாய் அவ்வாறு நொண்டுவதற்குக் காரணம் என்னவென்று உற்றுப் பார்த்துத் தெரிந்து கொண்டு, பிளாரன்ஸை நோக்கி "இதனுடைய கால் ஒடிந்து போகவில்லை. ஆனால் கல்லடியினால் காயம் பட்டு வீங்கியிருக்கிறது. நாய் அங்குமிங்கும் ஓடாமல் ஒரே இடத்தில் இருந்தால் காயம் குணமாகி விடும்" என்று சொன்னாள். பின்னும் அவள் நாய்க்கு நோவு அதிகமாய் இருந்ததைக் கண்டு, "இந்நோயைக் குறைக்க நம்மால் ஒன்றும் முடியாதா?" என்றாள்.

"சூடான வெந்நீரினால் அதன் கால்களை மெல்லக் கழுவினால் காயமும் சீக்கிரத்தில் ஆறிவிடும்; நோவாலும் நாய் கஷ்டப்படாது" என்றும் கூறினாள். உடனே பிளாரன்ஸ் நெருப்புண்டாக்கிக் கொஞ்சம் வெந்நீர்



வைத்து நாயினுடைய காயங்களைக் கழுவினாள். அவள் கழுவினதனால் நாய் சந்தோஷப்பட்டுத் தன்னுடைய நன்றியைப் பார்வையினாலும் வாலை ஆட்டுதலாலும் காண்பித்தது. அதன் பிறகு அவர்கள் இருவரும் திரும்பத் தங்கள் வீட்டிற்குச் செல்லும்போது வழியிலே நாயினுடைய எஜமானாகிய ரோகரைப் பார்த்தார்கள். பிளாரன்ஸ் அவனைப் பார்த்து, "நாயினுடைய கால்

ஒடிந்து போகவில்லை; ஆகையால் அந்நாய் உன்னைவிட்டுப் போகாது" என்றாள். இதைக்கேட்டதும் ரோகர்க்கு அளவில்லாத ஆனந்தம் உண்டாயிற்று.

மறுநாள் காலையிலும் பிளாரன்ஸ் ரோகர் வீட்டிற்குப் போய், வெந்நீரினால் நாயினுடைய காயங்களைக் கழுவினாள். இவ்வாறு இரண்டு மூன்று நாட்கள் செய்து வந்தாள். இங்ஙனம் செய்ததனால் நாய் நோய் நீங்கிச் சுகமடைந்து மறுபடியும் ஆடுகளைப் பாதுகாத்து வந்தது. இதனால் பிளாரன்ஸின் ஜீவகாருணியம் நனி விளங்கும்.

இந்தச் சம்பவம் வெகு நாட்களுக்கு முன்னமே நடந்தது. பிளாரன்ஸ் பிறரை நேசிக்கிற குணத்திலும், அவர்களுக்கு உதவி செய்கிற விஷயத்திலும் கருத்து ஊன்றியவளாய் வளர்பிறைபோல் வளர்ந்து வரும் காலத்தில், அவளுடைய பெயர் உலக முழுவதிலும் நன்கு பரவி மதிக்கப்பட்டு வந்தது. அவள் தன்னுடைய இளம்பிராயம் முதற்கொண்டே நோயாளிகளுக்கு உதவி செய்து வந்தாள்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில், ஐரோப்பா தேசத்தில் கிரிமியா என்ற விடத்தில், ருஷியா தேசத்தாருக்கும், துருக்கி தேசத்தாருக்கும் பெரும் போர் நடந்தது. அதில் பலர் காயமடைந்து, உதவியற்றவர்களாயிருந்தனர். பிளாரன்ஸ் அதனைக் கேள்வியுற்று, இன்னும் வைத்தியம் தெரிந்த வேறு சிலரையும் சேர்த்துக் கொண்டு காயமடைந்த வீரர்களுக்குச் சிகிச்சை செய்து அவர்களைக் காப்பாற்ற அவ்விடம் சென்றாள்.

அந்தச் சமயத்தில் அந்த விடத்தில் அவள் ஆயிரக்கணக்கான வீரர்களுக்குச் சிகிச்சை செய்ய வேண்

டியதா யிருந்தது. இதனால் அவளுக்கு இளைப்பாறவும் தூங்கவும் தக்க நேரம் கிடைக்கவில்லை. ஆயினும் தன் மெய் வருத்தத்தை நோக்காது வைத்தியசாலைகள் மேன் மேலும் விருத்தியடைய வேண்டுமென்று தக்க முயற்சி இடைவிடாது செய்து வந்தாள்.

அவள், தன்னுடைய ஆயுட்கால முழுவதையும் பிணியாளருக்குச் சிகிச்சை செய்வதிலேயே கழித்தாள். கடைசியாக அவள் தன்னுடம்பு ஆரோக்கிய மடைவதற்குரிய நித்திரையையும், இளைப்பாறுகிறதற்கு ஏற்ற காலத்தையும் அடையாமையால் நோய்வாய்ப் பட்டு இறந்து போய்விட்டாள்.

பிளாரன்ஸ் நைட்டிங்கேல், ஸ்திரீ வைத்திய சாலைகளை ஏற்படுத்தியும், போரில் புண்பட்ட வீரர்களுக்கு வைத்தியம் செய்தும், ஏழைகளுக்கு உதவி புரிந்தும் உலகத்திற்குப் பலவகையாக உழைத்து நன்மை செய்த சிறந்த உத்தமியாவள்.

## 2. சிறு துரும்பும் பல்லுக்குத்த உதவும்

ஒரு காசுக் கடையில் காசு அடிக்கும் யந்திரசாலையிலிருந்து அப்பொழுது தான் வெளிவந்த ஒரு பொன் நாணயமாகிய பவுனும், செம்பு நாணயமாகிய ஒரு பென்னியும், வர்த்தக பீடத்தின்மேல் காணப்பட்டன. பொன் நாணயம் செப்புக் காசைப் பார்த்து, "நீ என்னருகே இராதே. நீ அற்பமானவன். என்னைச் சீமான்களும் சீமாட்டிகளும் விரும்புவர். நான் மிகுந்த பிரயோஜனம் உள்ளவன். என்னைச் செய்திருக்கிற பொன்னாலேயே அரசருடைய மகுடங்கள் அமைக்கப்படுகின்றன" என்று பெருமை பேசியது.

அந்தச் சமயத்தில் ஒரு உலோபி அந்தக் கடைக்கு வந்து அந்தப் பொன் நாணயத்தை விலைக்கு வாங்கிக் கொண்டான். அப்பொழுது பென்னி பவுனுக்கு வந்தனம் அளித்து "நீ க்ஷேமமாக வாழ்வாயாக" என்று வாழ்த்தியது.

உலோபி தான் வாங்கின பவுனை ஒரு பையில் போட்டுப் பத்திரமாய்க் கொண்டுபோய் வீட்டில் சேர்த்தவுடன், பூமியில் ஒரு குழி தோண்டித் திருடர்கையில் அகப்படாதிருக்கும் பொருட்டு அதனைப் புதைத்து வைத்தான்.

உலோபி, பொன் நாணயத்தை வாங்கிக்கொண்டு தன் வீட்டிற்குச் சென்றபின், கடைக்காரன், தெருவில் விழுந்துவிட்ட ஒரு கிழவிக்குப் பையனொருவன் உதவி புரிந்ததைக் கண்டு மனமகிழ்ச்சிகொண்டு அச் சிறுவனுக்குத் தன்னிடத்திலிருந்த செப்பு நாணயமாகிய பென்னியைப் பரிசாக அளித்தான். அவன் அந்தப் பென்னியையெடுத்துக்கொண்டு வீட்டிற்கு விரைந்தோடிச் சென்று, அதைத் தன் சகோதரிக்குக் காண்பித்து அது தனக்குக் கிடைத்த வரலாற்றையும் கூறினன்.

அந்தக் காசு பளபளப்பாய் இருந்ததனல் தன் சகோதரி அதை விரும்புகிருள் என்று அறிந்து அவளுக்குக் கொடுத்தான். அவள், அப் பென்னியைத் தன் தாயினிடத்தில் காண்பிக்கப்போகும் சமயத்தில் எதிரில் ஒரு முடவன் நொண்டி நொண்டி பிச்சைகேட்டுக் கொண்டு வந்தான். அச் சிறுமி அம்முடவனுக்குத் தன் கையிலிருந்த காசைக் கொடுத்து, அது தன் சகோதரனுக்குக் கிடைத்த வரலாற்றையும் அவனிடம் சொன்னள். முடவன் அதைப் பெற்றுக்கொண்டு மிகுந்த

சந்தோஷத்துடன் ஒரு ரொட்டிக் கடைக்குப் போய் ஏதாவது வாங்கலாம் என்று எண்ணுகையில், அவ்விடத்தில் வயது முதிர்ந்த சந்நியாசி ஒருவன், கையில் ஒரு தடியை ஊன்றிக்கொண்டு மெல்ல நடந்து வந்தான். அவன், துருக்கியரால் சிறையில் அடைக்கப்பட்ட தன் சகோதரனை மீட்கும்பொருட்டுப் பணம் சேகரிப்பதற்காக ஊரூராய் அலைந்து திரிந்தவன். அவனுடைய பரிதாபகரமான சரித்திரத்தைக் கேட்ட இந்த முடவன், மனமிரங்கித் தனக்குக் கிடைத்த புதிய பென்னியை அவனுக்குக் கொடுத்து அதன் வரலாற்றையும் தெளிவாகக் கூறினன். இதைக் கண்ணுற்ற ரொட்டிக்காரன் முடவனுக்கு வேண்டிய அளவு ரொட்டியை இனமாகக் கொடுத்தான்.

சந்நியாசி, எருசலேம் நகருக்கேகி, அவ்விடத்திலிருந்த துருக்கிய கவர்னரிடம் சென்று, தான் வைத்திருந்த பணத்தைக் கொடுத்துத் தன் சகோதரனை விடுதலை செய்யும்படி வேண்டிக்கொண்டான். கவர்னரோ கொடுத்த தொகை போதாது என்றும், இன்னும் அதிகமான தொகை வேண்டும் என்றும் சொன்னர். அப்பொழுது சந்நியாசி தன்னிடத்திலுள்ள பணம் எல்லாவற்றையும் கொடுத்துவிட்டதாகவும்,ஒரே ஒரு பென்னி மாத்திரம் இருப்பதாகவும், அதன் வரலாறு இப்படிப்பட்டது என்பதையும் எடுத்து உரைத்தான். கவர்னர் துரை, பலவித நன்மைகளுக்குக் காரணமாயிருந்த அந்தப் பென்னியைக் காண விரும்பினர். பிறகு அந்த அற்புதக் காசைப் பெற்றுக்கொண்டு மற்றத் தொகையைச் சந்நியாசியினிடம் திரும்பிக் கொடுத்துவிட்டு, அவன் சகோதரனையும் சிறையிலிருந்து விடுவித்தார்.

கவர்னர் அந்தப் பென்னியைத் தமது மார்பில் அணிந்து கொண்டார்.

பின்பு ஒரு சமயம் துப்பாக்கிக் குண்டு, யுத்தத்தில் அவர்மீது வந்து பாய்ந்தது. அந்தக் குண்டு அவர் அணிந்திருந்த செப்பு நாணயத்தின்மீது பட்டதனால், ஒருவித இடையூறுமில்லாமல் உயிர்தப்பிப் பிழைத்தார். கவர்னர் தம் தேயத்துச் சக்கரவர்த்தியினிடம், தாம் போரில் மடியாதபடி அப்பென்னியினால் காப்பாற்றப் பட்ட விஷயத்தை வெளியிட்டார்.

சக்கரவர்த்தியும் அந்த விநோதம் விளைக்கும் பென்னியைக் கண்ணுற்று, அதைத் தாம் பெற்றுக் கொள்ள வேண்டுமென்னும் விருப்பமுடையவரா யிருந் தமையைக் கவர்னர் குறிப்பால் அறிந்துகொண்டு, அந்தக் காசை வேந்தனிடம் கொடுத்துவிட்டார். அவ் வரசன் அதை ஒரு பொற் சங்கிலியில் பிணித்துத் தனது வாளாயுதத்தின் முனையில் கட்டித் தொங்க விட்டான். ஒருநாள் இரவில் போஜனம் அருந்தும் வேளையில்,அரசன் தனது மனைவியிடத்தில் ஆச்சரிய மான அந்தப் பென்னியின் சரிதையை விளம்பினான். அரசியும் அதைப் பார்க்க ஆவல் உடையவளாய் இருந் தாள். வாளில் தொங்கவிடப்பட்டிருந்த காசைக் கையில் எடுத்துச் சக்கரவர்த்தினி பார்த்துக்கொண்டிருக்கை யில், திடீரெனச் சங்கிலி அறுந்து, அந்தச் செப்பு நாணயம் அவர்கள் பருகுவதற்காக வைத்திருந்த யாலில் விழுந்து விட்டது. அதை யெடுத்துப் பார்க்கும் போது காசின் நிறம் மாறிப் பச்சைவர்ணமாயிருந்தது. இப்படி நிறம் மாறினதனால், அரசனும் அரசியும் தங்களுக்காக வைத்திருந்த பானத்தில் விஷம் கலந்

திருந்ததைக் கண்டுபிடித்தார்கள். இருவரும் அந்தப் பாலைக் குடிக்காமல் உயிர் தப்பினார்கள்.

பிறகு வேந்தன் அந்தப் பென்னியினால் தானும் தனது மனைவியும் உயிர்தப்பிப் பிழைத்ததை யெண்ணி யெண்ணி, அகமகிழ்ந்து அந்தப் பென்னியைத் தனது கிரீடத்தின் நடுவில் வைத்துச் சுற்றிலும் விலையுயர்ந்த கற்களைப் பதித்துத் தனது சிரத்தில் அணிந்துகொண்டு நெடுநாள் சுகமாக வாழ்ந்து வந்தான்.

அற்பமாக எண்ணப்பட்ட இந்தப் பென்னிக்குக் கிடைத்த மேன்மை மிகவும் ஆச்சரியப்படத் தக்கதே. அநேகருக்கு நன்மை விளைவித்ததால் இதை அற்புதக் காசு என்றே கூறலாமன்றோ! ஆதலின் நாம் எதையும் அற்பம் என்று எண்ணித் தள்ளிவிடலாகாது.

## 3. மனோரம்மியமே நித்திய விருந்து

ஒரு வேந்தன் தன்னுடைய உயர்ந்த பதவியினால் தனக்கிருக்கும் கஷ்டங்களைப் பெரிதாக எண்ணித் தனக்குக் கிடைத்த உயர்ந்த பதவியில் திருப்தி யற்ற வனாய்த் தனது குடிகளில், மனத் திருப்தியோடு ஜீவிக்கிற எவனேனுமொருவனைக் காணவேண்டுமென்று விரும்பினான். அதற்குத் தக்கபடி மாறுவேடம் பூண்டு அப்படிப்பட்ட மனிதனைக் கண்டு பிடித்து, அவனைப் போல் தான் உயிர்வாழ வேண்டுமென்ற விருப்பம் அவ னுக்கு உண்டாயிற்று. ஏனென்றால், அவன் தனது உயர்ந்த நிலைமையையும் பெருமையையும் விரும்பாமல் மனச் சமாதானத்தையே பெரிதாக மதித்தவன்.

பின்பு, அவ்வரசன் ஒரு பிரபல வியாபாரியின் வீட்டில் பிரவேசித்தான். அந்த வியாபாரி திரண்ட

பொருள் தேடிச் சந்தோஷமாக வேலை செய்யாமல் தன் வாழ்நாளைக் கழித்து வந்தான். அவ் வியாபாரி தான் ஒரு வேலையுஞ் செய்யாமல் வாளா விருப்பது தனக்கு மிகவுங் கஷ்டமாக இருக்கிறதென்று முணுமுணுத்துக் கொண்டிருக்கிறதை அரசன் கண்டான்.

பக்கத்துத் தெருவில் ஓயாமல் வேலை செய்து கொண்டிருந்த ஒரு மனிதன், தன் அயல் அகத்தான் பணந்தேடித் தன் அந்திய காலத்தைச் சுகமாகக் கழிப்பதைப் பார்த்துத் தனக்கு அவ்வித நிலைமை எப்பொழுது வருமோ என்று மனம் புழுங்கி ஏக்கங் கொண்டிருந்தான். மன்னன் அவனை நோக்கி, "நீ உன் நிலைமையில் திருப்தி யுள்ளவனாக இருக்கிறாயா?" என்று கேட்டான். அதற்கு அவன், "ஐயா! எனக்கு என்ன திருப்தி? நான் இரவும் பகலும் ஓர் அடிமையைப்போல் கஷ்டப்பட்டு வேலை செய்கிறேன். என் வாழ்வு ஒரு நல்வாழ்வாகுமா?" என்றான். இறைவன் அவன் சொன்னதைக் கேட்டுவிட்டு, அப்பால் செல்லுகையில் இராஜ்யத்தில் உயர்ந்த பதவியினால் ஒருவித நன்மையுங் கண்டதில்லை என்றும், தனக்கு மேற்பட்டவர்கள் தன்னை இழிவாக நடத்துகிறார்கள் என்பதையும், கீழ்ப்பட்டவர்கள் தன்னுடைய நிலைமையைப் பார்த்துப் பொறாமை யடைகிறார்கள் என்பதையும் கண்டு, மனம் வருந்தி உத்தியோகம் செய்து ஜீவிப்பதைப் பார்க்கிலும், ஏதாவது ஒரு வியாபாரஞ் செய்து சந்தோஷமாகக் காலங் கழிக்கலாம் என்று ஒருவன் தனக்குள் பேசிக்கொண்டிருந்த விஷயம் அவன் செவியில் விழுந்தது. அரசன் இந்த மனிதனும் அதிருப்தியாகவே இருப்பதை யறிந்து, திருப்தியுடைமையை வறுமை இல்லாமலும் மேலான

பதவியை யடையவேண்டுமென்ற அவா இல்லாமலும் இருக்கிறவர்களிடமே கண்டுபிடிக்கலாம் என்று தீர்மானித்து, ஒரு தச்சனை அவன் வீட்டில் சந்தித்து, அவனை நோக்கி "உன்னுடைய வேலை சுயேச்சையாய்ச் செய்யக் கூடிய வேலையாதலால், நீ மனத் திருப்தியோடு ஜீவிக்கக் கூடுமே" என்று கேட்டான். அந்தத் தச்சனோ "வியாபாரத்தில் பொருள் தேடிச் செல்வமாய் வாழ்வதும், உயர்ந்த உத்தியோகத்தில் அமர்ந்து பணியாட்களைக் கட்டளையிட்டு, ஆடம்பரமாக வாழ்வதுமே மேலானது" என்று மொழிந்தான். மேலும், தன்னுடைய வேலை கஷ்டமான தென்றும், தனக்கு அதிக ஊதியம் கிடைக்காமையினால் தான் ஏழையாய் ஜீவிக்க வேண்டியதாயிருக்கிறதென்றும் அதனாலேயே தான் துர்பாக்கியனாக இருப்பதாகவும் கூறினான்.

பிறகு வேந்தன் விசனத்தோடு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் பட்டணத்திற்கு வெளியே சென்று, பாதை யோரத்தில் வசித்திருந்த ஒரு கூலிக்காரன் வீட்டில் பிரவேசித்தான். அந்தக் கூலிக்காரன் அவனை அன்போடு வரவேற்றுத் தன்னிடத்திலுள்ள அற்ப உணவை அவனுக் களித்து உபசரித்தான். மன்னன் அவனைப் பார்த்து "சிநேகிதனே, உன் நிலைமையைப் பார்த்தால் மிகவும் பரிதபிக்கக் கூடியதாகவே இருக்கிறது" என்றான். அக் குடியானவன் புன்சிரிப்போடு அரசனைப் பார்த்துத் தான் பகல் முழுவதும் நெற்றி வியர்வை நிலத்தில் விழும்படி வேலை செய்வதாகவும், அதற்குத் தகுந்த கூலி கிடைக்கிறதென்றும், தனக்கு ஒழிந்த நேரங்களில் ஒரு சிறிய தோட்டம் அமைத்து அதில் உருளைக்கிழங்கு முதலியவற்றைப் பயிரிடுவத

ஞல் தனக்கு யாதொருகுறைவும் இல்லையென்றும் பதில் உரைத்தான். இறைவன் அவனை நோக்கி "உனக்கு ஒரு குறைவுமில்லையா? உனக்குக் கஷ்டங்கள் இல்லையா?" என்று வினவினன். குடியானவன் அரசனைநோக்கி எனக்குக் கஷ்டங்களும் வருத்தமும் உண்டு. நான் வாதரோகத்தால் அடிக்கடி பீடிக்கப் படுகிறதுண்டு. அப்பொழுது வேலைசெய்ய இயலாதிருப் பதும் உண்டு. என்னுடைய எஜமானன் அவ்வளவு நல்ல மனிதனும் அல்லன்; என்றாலும் எனக்கு எவ் வளவு துன்பம் இருந்தாலும், நான் அனுபவித்து வரு கிற நன்மைகளுக்கு அளவில்லை. மற்றவர்களுக்குக் கிடைக்கிற நன்மைகளைப் பார்க்கிலும் எனக்குக் கிடைப் பவை அதிகம். ஆதலின் நான் என்னுடைய நிலைமை யைக் குறித்து விசனிக்காமல் வெகு மனோரம்மியமாய் ஜீவிக்கிறேன்" என்று சொன்ஞன்.

அரசன் அப்பொழுதுதான் மன ரம்மியமான இனிய வாழ்க்கையின் இரகசியத்தை அறிந்து கொண் டான். அது என்ன வென்ருல், ஒருவன் எந்த நிலை மையில் இருந்தாலும் தன் வாழ்க்கையில் இன்பத் தோடு துன்பத்தையும் சமமாகவே நினைத்து, அவ்விரண் டையும் சந்தோஷமாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதே. துன்பம் தருபவைகளை நீக்கிவிடப் பிரயா சைப்படுவதைப் பார்க்கிலும், அவைகளைக் கண்டு மனங் கலங்காமல் சகிப்பதே மேலாகும்.

நன்ருங்கால் நல்லவாக் காண்பவர் அன்ருங்கால்
அல்லற் படுவ தேவன்? —திருக்குறள்.

# 4. பொறுத்தவர் பூமியாள்வர், பொங்கினவர் காடாள்வர்

வெனிஸ் என்னும் நகரத்தில் டாரு, பிரியிலு என னும் பெயருள்ள இரண்டு சித்திரக்காரர்கள் இருந்தனர். அவர்கள் இருவரும் வாலிபத்திலேயே சித்திர வேலையில் மேன்மை யடையவேண்டும் என்று முயற்சி செய்தார்கள். சிறிது காலத்தில் அவர்களில் பிரியிலு என்பவன் சிறந்த சித்திரக்காரனாக விளங்கினான். டாரு அவ்வளவு தேர்ச்சி பெறாமையால் சாமானிய சித்திரக் காரனாகவே யிருந்தான். டாரு, பிரியிலுவினிடம் பொறாமை கொண்டவனாய், அவனை மிகவும் பகைத்து, அவனுக்குத் தீங்கிழைக்க எண்ணங்கொண்டான; ஆயி னும் டாரு, வெளிப்பார்வைக்கு அவனிடம் நட்புப் பாராட்டிவந்தான். பிரியிலு அவனுடைய சிநேகம் உண் மையானது என்று நம்பி அவனிடம் நேசம் வைத்தான்.

இப்படி யிருக்கையில், பிரஞ்சு தேசத்திலுள்ள தனவான் ஒருவன் பிரியிலுவைத் தன்னுடைய உருவப் படத்தை வரைந்து கொடுக்கும்படி கேட்டான். பிரியி லுவும் அவன் கூறியபடியே படம் ஒன்று வரைந்து அதனை அத் தனவான் இல்லத்திற்கு எடுத்துச் சென் றான். அந்தக் காலத்தில் திடீரென வெனிஸ் நகரத்தா ருக்கும், பிரஞ்சு தேசத்தாருக்கும் ஒரு பெரிய யுத்தம் ஆரம்பித்து விட்டது. இப் போரினால் தனவந்தன் வெனிஸ் நகரத்தைவிட்டுத் தன் சொந்த தேசமாகிய பிரான்சுக்குப் போக நேரிட்டது. உடனே புறப்பட வேண்டியிருந்ததனால் தன் உருவப் படத்திற்குப் பணம் கொடுத்து வாங்கிக்கொள்ள இயலாதவனாக இருந்தான்.

பிரியிலுவோ பிரபுவினிடம் படத்தைக்கொடுத்துவிட்டு, அதன் விலையைப் பிறகு அனுப்பும்படி சொல்ல, பிரபுவும் அதற்கிசைந்து படத்தைப் பெற்றுக்கொண்டு, தனது சொந்த தேசம் போய்விட்டான். சிறிது காலங் கழித்து அப் பிரபு, சித்திரக்காரனுக்குச் சேரவேண்டிய தொகையை வெனிஸ் நகரத்திலுள்ள ஒரு யூதன் மூலமாகக் கொடுத்து அனுப்பிவிட்டான்.

இந்தச் சித்திரக்காரனைக் கெடுக்கவேண்டும் என்று சமயம் பார்த்துக் கொண்டிருந்த டாரு என்பவன், பொறாமையினால் தூண்டப்பட்டவனாய், பிரியிலு என்பவன் தன் நாட்டிற்கு விரோதியான பிரான்சு தேசத்துப் பிரபுவினிடமிருந்து இரகசியமாகப் பணம் பெற்றான் என்று அத் தேசத்தின் அதிகாரிகளுக்கு அநாமதேயமான கடிதம் ஒன்றை வரைந்து அனுப்பினான். பிரியிலு இந்தக் குற்றத்திற்காகக் குற்றவாளி யாக்கப்பட்டு அரசன் சமூகத்திற்குக் கொண்டுவரப்பட்டான். அவன் அது விஷயமாகத் தான் நடந்துகொண்ட விதத்தைத் தெளிவாகவும் உண்மையாகவும் எடுத்துக் கூறினான். அதிகாரிகள் அவன் குற்றமற்றவன் என்றறிந்திருந்த போதிலும், அவனைச் சிறையில் அடைத்து வைத்தனர். பிறகு அந்தரங்கமாக இதன் உண்மையை விசாரித்தார்கள்.

அவன் அந்நிய நாட்டானிடமிருந்து, தான் செய்த வேலைக்காகவே கூலி பெற்றுக் கொண்டானென்றும், வேறு எவ்விதத்தாலும் அவன் தேசத்துரோகியாய் கைக்கூலி பெறவில்லை யென்றும், அப்படி அநாமதேயக் கடிதம் எழுதியதன் நோக்கம் இன்னதென்றும் நன்கு அறிந்துகொண்டார்கள். ஆனாலும் அத்தேசத்தின் வழக்கப்படி அவனை உடனே சிறையினின்று விடு

விக்காமல் காவற் கூடத்திலேயே சிலநாள் இருக்கும்படி செய்து, அவ்விடத்தில் சுகமாய் ஜீவிக்கும்படி நல்ல விருத்தி யடைதற்குரிய தொழிலைக் கொடுத்து அவனுக்கு வேண்டிய சகல சௌகரியங்களையும் அளித்தனர். அதுவன்றியும், மந்திராலோசனை சபைக்கு அத்தேயத்தின் சரித்திர சம்பந்தமான ஒரு சித்திரப் படத்தையும் வரைந்து கொடுக்கும்படியும் அவனைக் கேட்டுக் கொண்டார்கள்.

இது இவ்வாறு இருக்க, டாரு என்பவன் தான் நினைத்த காரியம் கைகூடியதென்றும், இனி அத்தேசத்தில் தனக்கு மிஞ்சிய சித்திரக்காரன் இல்லையென்றும் மனப்பால் குடித்துக் கொண்டிருந்தான். பிறகு இவன் மந்திராலோசனை சபையாரிடம் சென்று தனக்கு ஒரு வேலை கொடுக்க வேண்டுமென்று கேட்டான். சபையாரும் இவனை அவமானப்படுத்த வெண்ணி, பிரியிலுவுக்குக் கொடுத்த வேலையையே இவனுக்கும் கொடுத்தார்கள். ஆனால் ஒரு நிபந்தனை ஏற்படுத்தப்பட்டது. அது என்னவெனில், இவனுடைய சித்திரவேலையையும் இவனுக்கு முன்னரே அதே வேலையைச் செய்யும்படி தாங்கள் ஏற்படுத்திய வேறொரு சித்திரத்தையும் ஒப்பிட்டுப் பார்த்து, அவற்றில் எது சிறந்ததோ அதையே பெற்றுக்கொள்ளுவதாகச் சொன்னதாகும்.

டாருவுக்கு மற்றொரு சித்திரக்காரன் இன்னான் எனத் தெரியாது. டாரு படம் எழுதி முடித்துவிட்டு அதிகாரிகளுக்குத் தெரிவித்தான். அவர்கள் அதைக் கண்ணுற்று மெச்சி வியந்தார்கள். பின்பு, அவர்கள் அவனை ஆலோசனை மண்டபத்தில் முன்னமே வைக்கப் பட்டிருந்த படத்தைப் பார்க்கும்படி அழைத்துச்

சென்றார்கள். அப்பொழுது அந்த மண்டபத்தில் அநேக கனவான்கள் கூடியிருந்தனர். அவர்களுடன் பிரியிலுவும் அங்கு உட்கார்ந்திருந்தான்.

சிறைவாசம் செய்கிறான் என்று தான் நினைத்த தனது விரோதியைப் பார்த்தவுடன் டாரு மனந்தடு மாறினான். அப்பொழுது அத்தேசத்தின் அதிபதி டாருவைப் பார்த்து, எங்களது நண்பனாகிய பிரியி லுவை நாங்கள் அரண்மனையிலேயே இருக்கச் செய்து நீ வரைவதாக ஏற்றுக்கொண்ட அதே படத்தை எழு தும்படி அவனைக் கேட்டுக்கொண்டோம். அவனுடைய படத்தை உன்னுடைய படத்தோடு ஒப்பிட்டு எது சிறந் தது என்பதை நீயே கூறுக' என்று கேட்டார்.

உடனே டாருவுக்கு நாக்குக் குழறியது. சரீரம் நடுங்கியது. தன்னுடைய வஞ்சகச் செயல் வெளியாய் விட்டது என்றறிந்து வெட்கமடைந்து தனக்குக் கிடைக் கும் தண்டனையைக் குறித்து அச்சமுற்றான். அதிபதி டாருவை நோக்கி, "உன்னுடைய படம் இந்த மண்ட பத்தில் தொங்கவிட்டிருக்கும் படத்திற்கு இம்மியள வும் ஈடாகாது. அந்தப் படந்தான் இம்மண்டபத்திற்கு அலங்காரமாயிருக்கிறது" என்றார். ஆனால் உனக்குப் பரிசளிக்கப்படுமென்று சொல்லிப் பக்கத்தில் நின்ற காவலாளரை நோக்கினார். உடனே அக்காவலாளர்கள் டாருவின் கைகால்களில் விலங்கிட்டுச்சிறைச் சாலை யில் அவனை யடைத்தார்கள். பிரியிலுவை அதிபதி விடுதலை செய்தார். டாரு ஒரு வருஷம் சிறைவாசஞ் செய்து, பின் விடுதலை பெற்றும், தன் நாட்டிலிருக்க மனம் பொறாமல் அந்நாட்டை விட்டு ஓடி ஒழிந்தான்.

"கெடுவான் கேடு நினைப்பான்"

## 5. தீமையை நன்மையினால் வெல்லலாம்

வெனிஸ் நகரத்தில், உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்த அந்தினோர் என்னும் பெயருள்ள பிரபல பிரபு ஒருவர் இருந்தார். அவர் தம்மைப் போன்றவர்களின் பிரபுத்துவத்தை வெகு கண்ணியமாய் எண்ணினார்; தங்களினும் தாழ்ந்த வகுப்பினர் செல்வர்களாகிறதைக் காண மனஞ் சகியார். இவ்வாறு அவரால் இழிவாக மதிக்கப்பட்ட வகுப்பினருள் கால்பேஜோ என்ற வியாபாரி ஒருவன் இருந்தான். அவன் தன் வகுப்பினருக்குள் மிகவும் செல்வாக்கு உடையவனா யிருந்தான். அவன் ஒரு நற்குண நற்சீலன். அவன் தன்னுடைய முயற்சியால் மெய்வருந்திச் செம்மையான வழியில் பொருள் சம்பாதித்து ஒரு பெரிய தனவான் ஆனான்.

அவனது நிலைமையைப் பார்க்கச் சகியாத அந்தினோர் பிரபு, தந்திரமான மொழிகளைக் குறிப்பாகப் பகர்ந்து கால்பேஜோ வஞ்சகத்தினாலும், சூதினாலும் பொருள் சம்பாதிக்கிறான் என்று பலபேருடைய மனத்தைப் பேதப்படுத்தினார். அநேக பிரபுக்கள் அது உண்மை என்று நம்பினார்கள். சிறிது காலத்தில் வெனிஸ் நகரத்தாருக்கும் துருக்கியருக்கும் யுத்தம் ஏற்பட்டது. அந்த யுத்தத்தினாலே வெனிஸ் நகரத்திலுள்ள கப்பல்கள் பிற தேசம் சென்று வியாபாரம் செய்ய இயலாதவையா யிருந்தன. வியாபாரம் அடியோடு நின்றுபோயிற்று.

அப்பொழுது கால்பேஜோ என்பவனது கப்பல்களில் ஒன்று, சிமர்னா என்னும் பட்டணத்திலிருந்து வெனிஸ் நகரத்திற்கு வந்து சேர்ந்தது. அதைக்கண்ட

வியாபாரிகளுக்கு மனத்தில் ஒரு சந்தேகம் உதித்தது. 'இவனுடைய கப்பலை மாத்திரம் ஏன் துருக்கியர் பிடித்துக்கொள்ளவில்லை? இவன் தேசத் துரோகியோ? அல்லது சத்துருக்களுக்கும் இவனுக்கும் ஏதேனும் அந்தரங்க ஏற்பாடுகள் உண்டோ?' என்று பலவாறு சந்தேகித்தனர்.

அப்பொழுது அந்தினா் பிரபு, "காற்றுள்ளபோதே தூற்றிக்கோள்" என்ற பழமொழிப்படிக் கால்பேஜோவுக்கு விரோதமாகக் கருதப்பட்ட சந்தேகங்களைத் தந்திரமாக ஸ்திரப்படுத்தி அவனைச் சிறையில் அடைக்கும்படி செய்துவிட்டார்.

தன்னை விசாரித்தபோது நேர்மையாகவும் உண்மையாகவும் பதிலுரைத்ததனால் கால்பேஜோவுக்கு யாதொரு பலனும் ஏற்படவில்லை. அவன் தன்னுடைய கப்பல் யுத்தம் தொடங்குவதற்கு முன்னரே சிமர்னு என்னும் பட்டணத்தை விட்டுப் புறப்பட்டுவிட்டதென்றும், வழியில் பழுதுபார்க்கும் பொருட்டு, கார்பு என்ற இடத்தில் தங்கியதென்றும், ஆகையினாலேயே போர் ஆரம்பிக்குமுன் இது இவ்வூர் வந்து சேர முடியவில்லையென்றும் கூறினான். அந்தினார் பிரபுவின் தூண்டுதலின் மேல், இவனுடைய வார்த்தையில் நம்பிக்கை ஏற்படாமல் போனமையால், இவன் தேசத்தை விட்டுத் துரத்தப்பட்டான். இந்தத் துன்பத்தைத் தனக்கு உண்டாக்கியவன் இன்னான் என்பதைக் கால்பேஜோ அறியாதவனல்லன்.

பிறகு பெரும்போர் கடுமையாக நடந்தது. துருக்கியருக்கு வெற்றிமேல் வெற்றி கிடைத்தது. வெனிஸ் நகரத்தாரில் அநேகர் சிறை பிடிக்கப்பட்டார்கள். சிறை

யில் அடைக்கப்பட்டவர்களில் அந்திஞர் பிரபுவின் ஏகபுத்திரனும் ஒருவன். பிரபு, போருக்குச் சென்றிருந்த தன் செல்வன் வருவான், வருவான் என்று வெகு ஆவலோடு அநேகநாள் எதிர்பார்த்திருந்தார். ஆனால் நாள் செல்லச் செல்லத் தம் குமாரன் திரும்பி வருவான் என்ற நம்பிக்கை அவர் மனத்தினின்றும் நீங்கியது.

சிலநாள் கழித்து வெனிஸ் நகரத்திற்கு ஒரு படகு வந்தது. அதிலிருந்து ஒரு வாலிபன் இறங்கி, அந்திஞர் பிரபுவின் மாளிகையை நோக்கி விரைந்து சென்றான். அவன் அம் மாளிகையை யடைந்து, வாயிற் காப்போரையும் கடந்து, படிக்கட்டின் வழியாய் மேல் மாடிக்கேறிப், பிரபு உட்கார்ந்திருந்த அறைக்குள் நுழைந்தான். அங்கே அவன், வயோதிகர் ஒருவர் மிகுந்த விசனத்தோடு தலைகுனிந்த வண்ணமாய் உட்கார்ந்திருந்ததைக் கண்டான். அவர் மனக் கலக்கத்தோடு இருந்தமையால் உள்ளே வந்த வாலிபனைக் கவனிக்கவில்லை.

வாலிபன் சற்றுப் பொறுத்து, அம் முதியவரை யணுகி, "அன்புள்ள தந்தையே" என்று அழைத்தான். அன்போடு அழைத்த அவ் வார்த்தையைக் கேட்டவுடனே அவ் விருத்தர் குதித்தெழும்பி, அன்பினால் கண்களில் நீர் ததும்பத் தமது செல்வக்குமாரனை புறத தழுவிக்கொண்டு தேம்பித்தேம்பி யழுதார். சிறிது நேரங் கழித்துத் தம் மகனை நோக்கிக் "கண்மணீ, நீ எவ்வாறு சிறையில் அடைக்கப்பட்டாய்? நீ எவ்விதம் அந்தச் சிறையினின்றும் மீண்டாய்?" என்று கேட்டார். "நான் சிறையி லடைக்கப

பட்டிருந்தேன். பின்பு கிரீஸ் தேசத்தானகிய ஏஞ் சலுஸ் என்பவனுல் காப்பாற்றப்பட்டேன். நான் சிறை யில் கிடந்த நாளில் நோயினுல் பீடிக்கப்பட்டு இறக்குந் தறுவாயி லிருந்தேன். அந்தக் கனவான் என்னை அடி மையாகக் கிரயத்திற்கு வாங்கி எனக்கு வேண்டிய வற்றை உதவி, என்னை மிகவும் அன்போடு பாதுகாத் தார். அவரால் உயிர்ப்பிச்சை பெற்றேன். கடைசி யாக அவர் என்னை அடிமைத் தனத்திலிருந்து விடுதலை செய்து தம்மிடம் அனுப்பிவிட்டார். ஒரு கடிதமும் உமக்கு வரைந்து அனுப்பியிருக்கிறார்'' என்று அந்தக் குமரன் பதில் கூறினன்.



பிரபு, அந்தக் கடிதத்தை ஆவலாய் வாங்கி, உறை கலயக் கிழித்து, எழுதியிருந்த விஷயத்தை வாசிக்

லானார். அக் கடிதத்தில், "உனது உயிர்போன்ற ஏக புத்திரனைக் காண்பாய்! நான் உன்னுடைய தூண்டுதலினால் தேசப் பிரஷ்டனானேன். இப்பொழுது நான் ஒரு கிரேக்கனைப் போல் மாறுவேஷம் பூண்டு, வேறொரு பெயரைத் தரித்துக்கொண்டு அலெக்சந்திரியா என்ற பட்டணத்தில் வசிக்கிறேன். என் தாய் நாட்டை நினைக்கிறபோது எனது உள்ளம் பாகாய் உருகுகிறது. உன்னுடைய புத்திரனைத் தற்செயலாய்ச் சந்தித்தேன். அவன் வெனிஸ் நகரத்தான். ஆகையால் அவனை எனது பிள்ளையைப் போலவே நேசித்தேன். என்னுடைய துக்கம் ஒருவாறு தணிதற்காக அவனை என்னிடமே நிறுத்திக்கொள்ளலாம் என்ற எண்ணம் என் மனத்தில் உதித்தது உண்டு. ஆனால் அவனை நான் என்னுயிரினும் மேலாக நேசிக்கிறதனால் தாய்நாட்டிற்கு அனுப்புகிறேன். அவன் உனது அருமைப் புதல்வன். நீ அவனை ஏற்றுக்கொள்வாய்! அவனை உன்னால் விரோதம் பாராட்டப்பட்ட மனிதனிடமிருந்து வருகிற பரிசாகப் பெற்றுக்கொள்வாயாக. உனது ஒரே புத்திரனை அடிமைத் தனத்திலிருந்து மீட்டவன், உன்னால் பகைக்கப்பட்டுத் தேசத்திலிருந்து துரத்தப்பட்ட கால்பேஜோ என்பதை உணர்வாயாக" என்று எழுதியிருந்தது.

இதை வாசித்தவுடன் அப் பிரபுவின் கைகள் உதறின; மெய் நடுங்கிற்று. கடிதமும் கீழே நழுவி விழுந்தது. தமது தீச் செய்கையை நினைந்து சொல்லவொண்ணாத் துயரத்தில் மூழ்கினார். கால்பேஜோவுக்குத் தாம் செய்த அநியாயத்தை நிவர்த்திக்கும் வரையில் தமக்கு மனம் சமாதானமாயிருக்கமாட்டாதென்றும் அறிந்தார்.

பிறகு அப் பிரபுவின் பெரு முயற்சியினாலேயே கால்பேஜோ தனது ஜன்ம தேசமாகிய வெனிஸ் நகரத்திற்குத் திரும்பி வரும்படியான சுதந்தரத்தைப் பெற்றான்.

பின்பு, அந்தினர் தம் பொறுமையினால் வந்த பகையை விட்டுக் கால்பேஜோவினிடத்தில் உயிரொத்த அன்பு வைத்துச் சிறந்த நண்பரானார்.

இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல். —திருக்குறள்

## 6. பெற்றமனம் பித்து, பிள்ளை மனம் கல்லு

ஒரு தனவானுக்கு இரண்டு மைந்தர் இருந்தார்கள். அவ்விருவரில் மூத்தவன் நற்குண முடையவன்; தந்தைக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் இயல்புடையவன். இளைய குமாரனோ துடுக்கன்; வீண் பெருமையோடு உயிர்வாழ விரும்புகிறவன்; தன் மனம் போன வழியே கட்டுக்கடங்காமல் காலங்கழிக்கக் கருதுகிறவன். ஒரு நாள் அவன் தனது தந்தையை நோக்கித், "தந்தையே, நான் வெளிதேசம் போய் வாழ விரும்புகிறேன். உமது ஆஸ்தியை இரு பாகமாக்கி எனக்குரிய பாகத்தை என்னிடம் கொடுத்து விடும்" என்று கேட்டான்.

தகப்பனோ அவ்விதம் செய்ய மனமில்லாதவனாய் அவனைப் பார்த்து, "உனக்கு இவ்விடத்தில் யாதொரு குறைவு மில்லையே. நீ இவ்விடத்திலேயே உன் வாழ் நாளைச் சந்தோஷமாகக் கழிப்பாயாக. வெளிதேசம் சென்றால் உன் வாழ்நாள் வீணாளாகி விடும்" என்று மனம் உருகும்படி சில நன்மொழிகளைக் கூறினான்.

தாதை கூறிய நன்மொழிகள் செவிடன் காதில் சங்கு ஊதியது போலாயின. அவனோ 'மூர்க்கனும் முதலையும் கொண்டதுவிடா' என்ற முதுமொழிப்படித், தான் நினைத்தப்படியே வெளியே செல்லவேண்டுமென்றும், தன் பாகத்தை உடனே கொடுத்துவிட வேண்டுமென்றும் பிடிவாதம் செய்தான். பின்னர், அவனது தந்தை அவன் மூர்க்கத் தனத்திற்கு மனம் வருந்தி, அவன் விரும்பியபடியே தன்னுடைய சொத்தில் ஒரு பகுதியை அவனுக்குக் கொடுத்துவிட்டான்.

இளைஞன் தன் பாகத்திற்குக் கிடைத்த நிலம், கன்றுகாலி முதலிய பொருள்களை விற்றுப் பணமாக்கிக் கொண்டு தனது நாட்டைவிட்டுப் புறப்பட்டு அயல் தேசத்திற்குச் சென்று, அநேக காத தூரத்திற்கு அப்பால் உள்ள ஒரு பட்டணத்திற் சேர்ந்து, ஒரு பெரிய மாளிகையை விலைக்கு வாங்கினான்; தனக்குப் பணி விடை செய்யும்பொருட்டு ஏராளமான பணியாட்களை ஏற்படுத்திக் கொண்டான். அளவற்ற சோபாக்களும், மெத்தை பொதியப்பெற்ற நாற்காலிகளும், இன்னும் விலையுயர்ந்த பலவித சாமான்களும் அந்த மாளிகையில் நிரப்பப்பட்டன. பலவிடங்களிற் செல்லுதற்கு வேண்டியபடி விலையுயர்ந்த குதிரைகளையும், அவற்றைப் பூட்டுதற்குரிய நான்கு சக்கரங்கள் அமைந்த இரதங்களையும், இரண்டு சக்கரங்கள் அமைந்த வண்டிகளையும் வாங்கினான். இவன் இவ்வாறு தன் கையிலுள்ள பணத்தைத் தண்ணீரைப்போல் அளவின்றிச் செலவழித்துக் கொண்டு வந்தான்.

அவனுடைய இல்லத்தில், நித்திய விருந்தினராக ஏராளமான சிநேகிதர்கள் நாடோறும் வரவழைக்கப்

பட்டனர். பாட்டுக் கச்சேரியும், கேளிக்கைகளும் மிக உல்லாசமாக நடைபெற்றன. இந்த நிலையில் இவனுக்கு ஏற்பட்ட போலி நண்பர்கள் பலர். இவன் தீயவழியில் தன் பொருள் முழுவதையும் செலவு செய்துவிட்டான். அந்த நகரத்தார் எல்லோரும் இவனை ஒரு வீண் பெருமை பாராட்டுபவன் என்றே மதித்தார்கள். இவ னுடைய தீய ஒழுக்கத்தையும் களியாடலையும் கண்ட திரண்ட செல்வமும், 'ஓரிடத்திலும் நிலைபெறாது செல் லும் தன்மையது' என்னும் தனக்குரிய பொருளை யாவ ரும் அறியும்படி காட்டிவிட்டுச் சென்றது. இடம்பன் ஆண்டியானான். அவனுடைய நண்பர்களும்,

"காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனிற் பலராவர்—ஏலா
விடரொருவ ருற்றக்கால், ஈர்ங்குன்ற நாட!
தொடர்புடையோ மென்பார் சிலர்"

என்றபடி அவனை விட்டு அகன்றனர்.

பின்பு, இடம்பன்பாடு அம்பலத்திற்கு வந்துவிட் டது. கையிற் பொருளில்லாமையால் அவன் தன்னு டைய வீடு முதலியவைகளை விற்றுச் சில நாட்களைக் கழித்தான். தனக்குரியவைகளையும் இழந்து, உயிருக் குயிரான நண்பர் என்று எண்ணப்பட்டவர்களால் கை விடப்பட்டு, அஷ்டதரித்திரனாய்க் கையில் ஓடு எடுத்துக் கொண்டு யாசித்து வயிறு வளர்க்கலாயினான். "பாத் திரம் அறிந்து பிச்சை யிடு" என்ற வாக்கியத்தைக் கைக்கொண்டோர் அவனுக்குப் பிச்சை கொடாமல் அவனை வெறுத்துத் துரத்தினார்கள்.

அப்பொழுது அவன் ஜீவிக்க வேறு வழியில் லாமையால் ஏதாவது கூலிவேலை செய்து, பொரு

வீட்டி வயிற்றின் கொடுமை நீங்கும்பொருட்டு, ஒரு குடியானவன் வீட்டில் பன்றி மேய்க்கும் வேலையில் அமர்ந்தான். அது வரையிலும் மிகுந்த பெருமை யோடு ஜீவித்த இவனது தற்கால நிலைமை பார்ப் பவர்க்கும் பரிதாபப்படத் தக்கதாயிற்று. அவன் வயிற் றுக்குக் கூழ்வார்க்கிற விஷயத்தில் அவனது எஜ மானனுக்கே கஷ்டமாக விருந்தது. அச் சமயம் தேசத் திலும் பஞ்சம் உண்டாயிற்று. அவனுடைய பாடும் திண்டாட்டமாயிற்று. என்ன செய்வான் பாவம்? பசியின் கொடுமையினால் பன்றிக்குப் போடுகிற தவிட் டையாவது தின்னலாம் என்று ஒருநாள் எடுத்தான். எஜமானன் அதைக்கண்டு அவனை வாரினால் அடித் தான். அவன் உடுக்க வஸ்திரமும், உண்ண உணவும் அற்று, உடல் மெலிந்து, மெய் கறுத்துக், கண் குழி வீழத் தடி யொன்றைக் கையில் ஊன்றிக்கொண்டு தட்டித்தடுமாறி நடக்கும்படி நேரிட்டது. அந்தக் காட்சி கண்டார்க்கு இரக்கத்தை உண்டுபண்ணியது. பிறகு தனது எஜமானன் இடத்தினின்று நீங்கினான்.

இதுகாறும் தன் தந்தை வீட்டை நினையாதவ னுக்கு அப்பொழுதுதான் புத்தி வந்தது. தன் தாதை அகத்தில் அநேக வேலைக்காரர்கள் பசியின்றி உண்டு உடுத்துச் சுகமாக வாழ்ந்து வருவதை எண்ணி மனம் புழுங்கினான்; பிதாவின் அன்பை நினைத்து அழுதான்; புலம்பினான்; தன் தகப்பன் இடத்தில் போய்ச் சேர்ந்து விடலாம் என்றும் நினைத்தான். ஆனால் தனது தந்தை சொன்ன புத்திமதிகளைக் கேளாமல் அவ மதித்து, அவரை விட்டுப் பிரிந்து வந்ததனால் மறுபடி யும் அங்கு எப்படிப்போவது என்று வெட்கினான்.

பிறகு ஒருவாறு ஆலோசித்து, 'நான் இங்கிருந்து என் தந்தையிடம் போய்த், 'தாதையே, உமக்கு விரோதமாகவும், பரத்திற்கு விரோதமாகவும் குற்றம் செய்துள்ளேன். உம்முடைய புத்திரன் என்று சொல்லப்படுதற்கு நான் பாத்திரன் அல்லேன். என்னையும் உமது வேலைக்காரர்களில் ஒருவனாக வைத்துக் கொள்ளும்' என்று கெஞ்சிக் கேட்டுக்கொள்வேன் என்று நிச்சயித்து உடனே அவன் புறப்பட்டான். அப்பொழுது அவனது கோலம் அலங்கோலமாய் இருந்தது. அழுக்கடைந்த உடம்பினனாய்க், கந்தைத் துணியை உடுத்திக் கொண்டு கையிற் கோலூன்றி மெல்ல நடந்து சென்றான். தன்னை விட்டுப் பிரிந்தது முதல் ஒரு நிமிஷமும் அவனை மறவாத பட்சமுள்ள அவனது தந்தை அவனைப் பற்றிய கவலை மிகுந்தவனாய்த் தூர தேசஞ் சென்ற அவன் எப்பொழுது திரும்பி வருவான் என்று எதிர்பார்த்துக் கொண்டே யிருந்தான். ஒருநாள் அவன் பலகணி வழியாய் வழியைநோக்கிய வண்ணமாக இருந்தான். அச் சமயத்தில் வெகுதூரத்தில் ஒருவன் தள்ளாடித் தள்ளாடி வருவதைப் பார்த்தான். அவன் தன்னுடைய இளைய குமாரனது சாயலை ஒத்திருப்பதைக் கண்டு, உடனே அவனை நோக்கிச் சென்றான். அவன் அருகிற் சென்று தன் மகன்தான் என்று தெளிந்து அவனை மார்புறத் தழுவிக்கொண்டு கண்ணீர் சொரிந்து நிலையழிந்து நின்றான்.

உடனே தனயன் தந்தையை நோக்கித் "தந்தாய், நான் உம்முடைய நேசத்தை இழந்தேன். உம்முடைய புதல்வன் என்று கருதுவதற்கு அபாத்திரனானேன். என்னை உமது வேலைக்காரர்களில் ஒருவனாக ஏற்றுக்

கொள்ளும்" என்று பிரார்த்தித்தான். தந்தையோ அவனை இல்லத்திற்கு அழைத்துச் சென்று பரபரப்புடன் வேலைக்காரரை யழைத்து, மகன் உடுத்தியிருந்த கந்தைகளைக் களைந்து ஸ்நானஞ் செய்விக்கச் சொன்னான். பிறகு அவனுக்குப் புதிய வஸ்திரங்களைக் கொடுத்து, அவனது விரல்களுக்கு மோதிரங்களிட்டு அலங்கரித்த துடன், அவனுக்கு ஒரு பெரிய விருந்தும் செய்தான். அன்றுமுதல் அவன் தனது தந்தையின் அன்பை வியந்து அவனை விட்டுப் பிரியாமல் அடக்கத்தோடு அவன் சொன்னபடி கேட்டுச் சுகமாக வாழ்ந்துவந்தான்.

இதனால், உலகத்தில் மக்களைப் பெற்றோர்களில் தந்தை தம் மக்களிடத்தில் வைத்துள்ள அன்பைவிடச் சிறந்த அன்புடைமை வேறில்லை என்பது தெளிவாக விளங்குகிறது.

தம்பொருள் என்ப தம்மக்கள்; அவர்பொருள்
தம்தம் வினையான் வரும். —திருக்குறள்

## 7. தன்னுடம்பின் ஊன்கெடினும் உண்ணார்கைத்து உண்ணற்க

தென்னாட்டிலே பாண்டியர்கள் செங்கோல் நடத்தி வந்த காலத்தில், ஔவை என்னும் மாது சிரோமணி சோழ நாட்டிலுள்ள உறையூர் என்னும் இடத்தில், பிராமண சாதியினரான பகவன் என்பவருக்கும் ஆதி யென்பவளுக்கும் திருமகளாய்த் தோன்றினாள். ஔவை சகல கலைகளையுங் கற்றுத் தெய்வ பக்தி யுடைய வளாய்க், கவி பாடுவதில் தேர்ச்சி யுடையவளாயும் இருந்தாள். பசியாயிருந்தால் ஒருகை கூழுக்கும்

ஒரு பாடல் பாடுவாள். இதனால் ஔவைக்குக் கூழுக்குப்பாடி யென்றும் பெயர் வழங்கும்.

தென்னாட்டி லிருக்கும்பொழுது, ஒருநாள் ஔவை மிகுந்த பசியால் வருந்தி, ஒரு குடியானவன் வீட்டுத் தெருத் திண்ணையில் மிகவுங் களைப்படைந்தவளாய் உட்கார்ந்திருந்தாள். அந்தச் சமயத்தில் உள்ளே இருந்து வெளியிலே வந்த அவ் வீட்டுக்காரனைப் பார்த்து, "அப்பா, எனக்கும் பசி மிகுதியா யிருக்கிறது. உங்கள் வீட்டிலிருந்து சிறிது கூழாயினும் வார்த்தால் உண்டு பசியாறிப் போவேன்" என்றாள். மிகுந்த சாந்த குணமுடைய அம் மனிதன், ஔவையினுடைய பரிதாபமான வார்த்தைகளைக் கேட்டு மனமிரங்கித் தன் மனைவியிடம் இதைத் தெரிவிக்கும் பொருட்டுத் தன் வீட்டிற்குள் நுழைந்தான்.

'பெண்ணின் குணம் அறிவேன், சம்பந்தி வாய் அறிவேன்' என்பதற் கேற்பத் தனது இல்லாளின் குணத்தை அவன் அறிவானகையால், ஔவையை வீட்டிற்குள் அழைத்துச் செல்லாமல், தெருத் திண்ணையிலேயே இருக்கச் சொல்லிவிட்டுப், பிடாரியைப் போன்ற கொடியவளாகிய தன் மனையாளிடத்தில் சென்று, அவளுடைய அனுமதியினால் அவள் அருகில் மெல்ல உட்கார்ந்து, அவளுக்குத் தன்மீது அன்பு உண்டாகும்படி இதமான வார்த்தைகளைப் பேசித், தான் ஒரு பெண்போல் அவளுக்குத் தலைமயிரை வாரிச் சிக்கெடுத்து, பேன் பார்த்து ஈர் உருவித் தக்க உபசாரஞ் செய்து எங்கே கோபித்துக் கொள்ளுகிறாளோ என்று அஞ்சிச் சமயம் பார்த்து, மெய்நடுங்கி, நாக்குழற, மெதுவாய்

"ஒரு பழுத்த கிழவி கொஞ்சங் கூழுக்கு வந்திருக்கிறாள்" என்றான்.

இதைச் செவியுற்ற தாடகி போன்றவளாகிய அவள், நாகம் போல் சீறிப் பூதம்போல் ஆர்ப்பரித்து "உன் வாழ்வுக்கு ஒரு விருந்தா ?" உனக்குத் தொலைக்கிறதும் அல்லாமல் ஊருக்கெல்லாம் தொலைக்கவா ?" என்று ஏசினாள். அதனுடன் நில்லாமல் கழுநீர்ப்பானையை எடுத்துக்கொண்டு வந்து அவன் தலையிலே அபிஷேகம் செய்து, துடைப்பக் கட்டை கொண்டு வெண்சாமரம் வீசிப், பழமுறம் எடுத்து ஆலவட்டம் பரிமாறி அவனை வீட்டுக்கும் தெருவுக்குமாய்த் துரத்தித் துரத்தியடித்தாள். அப்பொழுது வீட்டுத் தலைவன் தனது பெண்டாட்டியினால் திண்டாட்டப் படுவதைக் கண்ட ஔவை இரக்கமுற்று,

"இருந்து முகந்திருத்தி, ஈருருவிப், பேன்பார்த்து,
விருந்து வந்ததென்று விளம்ப,—வருந்திமிக
ஆடினாள், பாடினாள், ஆடிப் பழமுறத்தால்
சாடினாள் ஓடோடத் தான்."

என்கிற செய்யுளைப் பாடினாள்.

பின்பு அவளது கணவன் மிகவும் வேண்டிக் கொள்ள, அவள் சற்று மனமிரங்கி ஔவைக்கு அன்னமிட்டபோது, ஔவை

"காணக்கண் கூசுதே, கையெடுக்க நாணுதே,
மாணுக்க வாய்திறக்க மாட்டாதே—வீணுக்கென்
என்பெல்லாம் பற்றி யெரிகின்ற தையையோ
அன்பில்லா ளிட்ட அமுது."

என்று ஒரு கவி சொன்னாள்.

அதன் பின்னர், ஔவை தன்னை வணங்கிய அந்தக் கிருகஸ்தனை நோக்கி அவனது இல்வாழ்க்கையைக் குறித்து இகழ்ந்து பேசி, அவனைத் துறவறம் பூண்டு ஒழுகும்படி வற்புறுத்தி அடியில் வரும் செய்யுளைச் சொன்னாள்.

“ பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தாலும் கூடி யிருக்கலாம்;—சற்றேனும்
ஏறு மாறாக இருப்பாளே யாமாயிற்
கூறாமல் சந்நியாசங் கொள்.”

மனத்தில் வெறுப்புக்கொண்டு ஒருவன் அளிக்கும் அறுசுவை யுண்டியை உண்ணுவதைக் காட்டிலும், அன்போடு அளிக்கும் கூழை உண்பதே சிறந்தது. ஆதலின்

“ ஏசி யிடலின் னிடாமையே நன்று; எதிரில்
பேசு மனையாளிற் பேய்நன்று;—நேசமிலா
வங்கணத்தி னன்று வலியபகை; வாழ்வில்லாச்
சங்கடத்திற் சாதலே நன்று;”

என்றார் ஔவையார்.

வெறுப்போடு அளிக்கும் அறுசுவை உணவினும்
விருப்போடு அளிக்கும் புற்கையே அமுதமாம்.

## 8. பேராசை பெரு நஷ்டம்

முன்னொரு காலத்தில் மகாலோபியான ஒரு அரசன் இருந்தான். அவனுக்கு ஒரே ஒரு மகளைத் தவிர வேறு பந்துக்கள் இல்லை. அவன் குமாரத்தியின் பெயர் மரகதவல்லி.

மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்ற மூன்றுவித ஆசைகளில் இந்த உலோபியானவன் பொன்

ஞசையினல் பீடிக்கப்பட்டான். இவன் வாழ்க்கையின் முழுநோக்கமும் தான் அருமையாய் நேசித்த தன் மகளுக்குத் திரண்ட ஐசுவரியத்தைத் தேடிவைக்க வேண்டும் என்பதே. இதற்கென்றே அளவற்ற தபொன் நாணயக் குவியலைச் சேர்க்கவேண்டுமென்னும் விஷயத்தில் கண்ணுங் கருத்துமா யிருந்தான். இப் பணப் பேய் இவனைப் பிடித்துக்கொண்டதுபோல் வேறு யாரையும் பிடித்ததில்லை. இவன் வரவர மகாலோபியாய் நியாய அநியாயங்களைச் சிறிதும் அறியாத நிலையிலிருந்தான். தன்னிடத்தில் இருக்கும் பொருள்களும் தான் பார்க்கும் பொருள்களுமாகிய எல்லாம் பொன்னு யிருக்க வேண்டுமென்று பேரவாக் கொண்டான்.

இதற்காகவே ஒரு அந்தரங்கமான சுரங்கம் வெட்டி அதில் ஒரு இருண்ட அறையில் பொன்னை யெல்லாம் குவித்துவைத்து, அதைப் பார்த்துக்கொண்டிருப்பதிலேயே ஏறக்குறைய நாள் முழுவதையும் கழித்தான். மற்றெந்தக் கருமங்களும் அவனுக்கு எட்டிக்காயைப்போல் கசப்பாயின. இந்தப் பொக்கிஷ அறையே அவனுக்கு மகிழ்ச்சியை யுண்டாக்கக் கூடிய தென்று மனப்பால் குடித்தான். அவ்வறையின் கதவைத் தாள் இட்டுக்கொண்டு பணப்பை, பொற்றட்டு, பொற்கட்டி ஆகிய இவற்றில் ஏதாவ தொன்றைக் கையில் எடுத்து, வெளிச்சத்தில் பார்த்தும், மேலே போட்டுக் கையிலேற்றுப் பிடித்தும் சந்தோஷப் படுவான். தன்னைப் போலக் குபேர சம்பத்துள்ளவர் வேறு எவருமில்லை என்று எண்ணுவான். எனினும் தன் ஆசைக்கு அளவில்லாமையால் மேலும் மேலும் பண ஆசையினல் பீடிக்கப்பட்டுத் தான் பார்க்கின்ற

பொருள்களெல்லாம் பொன்னாகா இல்லாவிடின் தான் எடுத்துக்கொண்ட முயற்சி யெல்லாம் வீணாகுமே யென்று மனங் கலங்கினான்.

ஒரு நாள் இந்த மகாலோபி வழக்கம்போல் தனது கஜானா அறையில் சந்தோஷமாய்ப் பொழுது போக்கிக் கொண்டிருக்கையில் ஒரு மனிதச் சாயல் அங்குத் தோன்றிற்று. அவ்வுருவத்தை உற்று நோக்கினான். கதவு தாளிடப்பட்டிருந்தும் அவ்வறையினுள் அழகிய யௌவன புருஷன் ஒருவன் நிற்பதைப்போல் தோன்றியதைக் கண்ணுற்று, ஆச்சரியப்பட்டு, அவ் வுருவம் மானிட வுருவுமல்லவென்று ஊகித்தறிந்தான். பின்பு அவன் அவ்வுருவத்தை அன்போடு நமஸ்கரித்தான். அந்த மனித உருவம் லோபியைப் பார்த்து, "நீ மிக்க பெருஞ் செல்வம் படைத்தவன்தான். உனக்கு நிகரான தனவான்கள் இவ்வுலகில் ஒருவரும் இரார் என்றே நினைக்கிறேன்" என்று சொல்லிற்று.

அந்த லோபி அவற்றைக்கேட்டு, "நான் அத்தகைய பெருஞ்செல்வன் அல்லன்; நான் சேமித்து வைத்திருப்பதெல்லாம் மிகச் சொற்பமே" என்று பதிலுரைத்தான். பின்னும் அவன் இதற்கே அவன் ஆயுளின் பெரும்பாகம் செலவழிந்து போய் விட்டது என்றும், இன்னும் பல வருடங்கள் தான் உயிரோடு இருந்தால் வேண்டிய அளவு திரவியம் சேகரிக்கக் கூடுமென்றும் மனக்குறையோடு கூறினான். இவனுக்கு மனத்திருப்தி இல்லை யென்றறிந்து அவ்வுருவம், "உனக்கு எது திருப்தி அளிக்குமோ அதைத் தெரிவிப்பாயாக" என்றது. அவன் ஆழ்ந்த யோசனை செய்து, "நான் தொட்டதெல்லாம் பொன்னாக மாறும்படி வரம் அளிக்கவேண்டும்"

என்று பிரார்த்தித்தான். அந்த வுருவம் அப்படியே உனக்குக் கனக ஸ்பரிச வரம்கொடுத்தேன் என்றுகூறி விட்டு மறைந்தது.

அந்த மகாலோபி அன்றைய தினந்தான் அயர்ந்து நித்திரை செய்தான். பொழுது விடிந்தவுடனே தனக்குக் கிடைத்த வரம் உண்மைதானு வென்றறியவிரும்பித் தன் கட்டிலின் காலைத் தொட்டான். உடனே அந்தக் காலானது பொன்மயமான காலாக மாறிற்று. இதனுல் கனக ஸ்பரிசம் சித்திபெற்றது என்று நினைத்து மனமகிழ்ச்சி யடைந்தான்.

பிறகு, அவன் தன்னுடைய நந்தவனத்தில் பிரவேசித்து, அங்கு ஏராளமாக ரோஜாச் செடிகளில் மலர்கள் நிறைந்திருப்பதைக் கண்டு, ஓடோடி எல்லா மலர்களையும் போதுகளையும் தீண்டினுன். உடனே யாவும் பொன் மயமான மலர்களாகவும் போதுகளாகவும் மாறின. அவன் அங்கும் இங்கும் ஒடி ஓடி உழன்றதனுல் அவனுக்குக் களைப்பு உண்டாயிற்று. பசியும் அவனை வாட்டியது. வீட்டிற்குச் சென்று தனக்கு உண்ண வைத்திருந்த ஆகாரத்தை ஆவலாய் எடுத்தான். அவ் வாகாரமும் பொன்கட்டியாக மாறிவிட்டது. பிறகு, பருகுவதற்காக வைத்திருந்த பானத்தை யெடுத்து வாயில் ஊற்றிக்கொண்டான். அதுவும் பொன்னுக மாறியது; அந்தோ பரிதாபம்! பசியோ வயிற்றைக் கிள்ளுகிறது. தாகமோ நாவை வறட்டுகிறது. என்ன செய்வான்? பணப்பேயால் பீடிக்கப்பட்டவன் பசியையும் தாகத்தையும் பொருட்படுத்தாது உட்கார்ந்திருந்தான். அந்தச் சமயத்தில் அவனது ஏகபுத்திரி, நந்தவனத்திற் சென்று அங்கு மலர்கள் யாவும் இயற்கைப் பொலிவை இழந்து

மணம் அற்றுப், பொன்மலர்களா யிருப்பதைக் கண்டு விசனமுற்று, அவற்றைக் கொய்யாமல் விட்டுவிட்டு அழுதுகொண்டே அங்கு வந்து சேர்ந்தாள்.

தன் குமாரத்தியின் விசனத்திற்குக் காரணம் தானேயென்றறிந்த அந்த உலோபி, மகளை நோக்கி, "அம்மா, அழாதே" என்று தேற்றி ஆகாரம் உண்பித்தான். அவளும் விருப்போடு பாலைப் பருகினாள். அப்பொழுது உலோபி, தொட்டதெல்லாம் பொன்னாய் மாறினதனால் மன வருத்தங் கொண்டவனாய்ச் சகல பாக்கியங்கள் இருந்தும், பசியைத் தணிக்கத் தன்னால் இயல வில்லையே என்று மிகவும் கஷ்டப்பட்டான். பசியின் கொடுமையைத் தாங்கமுடியாதவனாய்ப் பெருமூச்சு விட்டு அழத் தொடங்கினான். தன் தந்தைக்கு உண்டாயிருக்கும் விசனத்தைப் பார்க்க அவனது மகளுக்குப் பொறுக்க முடியவில்லை. அவள் அவனது துன்பத்திற்குரிய காரணத்தை அறிய விரும்பினாள். உடனே அவள் அவனருகிற் சென்று தனது கைகளால் அவனது கழுத்தைக் கட்டித் தழுவிக்கொண்டழுதாள்.

அந்த லோபியும் தனது வரத்தை மறந்தவனாய்த் தனது செல்வக்குமரியைத் தழுவி முத்தமிட்டான். அவனது வரத்தின் மகிமையால் அவ்வேக புத்திரியும் உயிரற்ற பொற்பாவையாய் மாறிவிட்டனள். அவ்வரத்தின் கொடுமையை நினைந்து, 'ஏன் இவ் வரத்தைப் பெற்றேன்' என்று ஏங்கிச் சிந்தை கலங்கினான் உலோபி. அவன் தனது அருமைக் குமாரத்தியைப் பழையஉருவம் அடையும்படி செய்ய வல்லவனுக்குத் தன் சொத்தையெல்லாம் கொடுத்துவிடலாம் என்றும் எண்ணினான்;

பேராசையினால் தான் பெற்ற வரத்தின் பலனை நினைந்து நினைந்து ஏங்குவானானான்; தன்னைத் தானே நிந்தித்துக் கொண்டான்; ஆறாத் துயரில் ஆழ்ந்தான்.

இப்படி இருக்கையில் முன்பு தோன்றிய உருவம், மறுபடியும் அவன் எதிரில் தோன்றி, "நண்ப, உனக்கு இப்பொழுது என்ன குறை? வரம் சித்தி பெற்றதல்லவா? இன்னமும் முகம் வாடியிருப்பதேன்? யாதேனும் மனக்குறை உண்டோ? உன்னைப் போன்ற பாக்கியவான் மூன்று உலகிலும் இல்லையே" என்று சொல்லிற்று. அதற்கு மகாலோபி தலைகுனிந்து, "சுவாமி, என்னைப்போல் துர்ப்பாக்கியன் இம் மூவுல கிலும் இல்லை. பொன்னை ஒருவன் புசிக்கலாமோ? பொற்பாவையுடன் பேசலாமா? என்னருமைச் செல்வி பொற்சிலையாய் மாறிவிட்ட பின்னர் யான் உயிர் வாழ்ந் திருப்பதில் பயன் என்ன?" என்றான்.

அவ்வுருவம் அவனை உற்று நோக்கி, "இப்பொழு தாவது உனக்குப் புத்தி வந்ததா? நீ யாது விரும்புகி றாய்? உனக்கு என்ன வேண்டும்? பொன்னாசை நீங் கிற்றா? கனக ஸ்பரிசம் உனக்கு வேண்டுமோ?" என்று வினவியது.

உலோபி "சுவாமி, எனக்கு அவ்வரம் வேண்டவே வேண்டாம். அணுவளவும் வேண்டாம்" என்று மொழிந் தான். உடனே அவ்வுருவம், அவனை நோக்கி, "நீ உன் தோட்டத்தின் அருகில் ஓடுகின்ற வாய்க்காலுக்குச் சென்று அதில் ஸ்நானம் செய். அதிலிருந்து ஜலத்தைக் கொண்டுவந்து பொன்னாக மாறின எல்லாப் பொருள் களின் மேலும் தெளி. இங்ஙனம் செய்தால் பொன் னாசைப் பேயால் உனக்கு ஏற்பட்ட தீவினைகள் எல்லாம்

உடனே நீங்கும்'' என்று வரமளித்து மறைந்து விட்டது.

பின்பு மகாலோபி, பேராபத்தினின்று நீங்கும் காலம் கிட்டியதென்று உள்ளங்களித்து மிகுந்த பரபரப்புடன், ஒரு பாத்திரத்தை எடுத்துச் சென்று வாய்க்காலில் இனித் தனக்குக் கனக ஸ்பரிசம் வேண்டாம் வேண்டாம் என்று மனதில் நினைத்துக்கொண்டு ஸ்நானம் செய்தான். அப்பொழுதே கையிலிருந்த பொற் பாத்திரம் முன்போலவே மட்கலமாக ஆயிற்று. உடனே அம்மட்கலத்தில் ஜலம் கொணர்ந்து பொற் பாவையாய் மாறியிருக்கும் தன்னுடைய மகளின்மீது தெளித்தான். தெளித்ததும் அவள் பழையபடி மானிட உருவம் அடைந்தாள். பிறகு, பொன் மலர்களின்மீதும் தெளிக்க, அவைகளும் மெய்யுருவை யடைந்தன.

பண ஆசையினால் தான் அடைந்த கஷ்ட நஷ்டங்களைக் கண்ணாரக் கண்டதனால், அன்றுமுதல் பொன்னை அடியோடு அவன் வெறுத்துவிட்டான். பொன்னாசைப் பேயும் அவனை விட்டு நீங்கியது. ஆதலால் பேராசைக்கு எப்பொழுதும் நாம் அடிமையாதல் கூடாது.

அவாவில்லார்க் கில்லாகும் துன்பம்; அஃதுண்டேல்
தவாஅது மேன்மேல் வரும். —திருக்குறள்

## 9. முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் அமெரிக்கா கண்டத்தின் மாசச்சூஸெட்ஸ் என்னும் பட்டணத்தில் சைரஸ் பீல்ட் என்பவர் பிறந்தார். அவர் இளம்பிராயத்திலேயே வியாபாரஞ் செய்ய ஆரம்பித்து,

அமைதியாய்க் காலங்கழிக்க வேண்டுமென்று தீர்மானித்தார். உலகத்தில் தொடங்கிய தொழிலைக் கஷ்டப்பட்டாயினும் இடைவிடாது செய்து முடிப்பதில் பீல்ட்டுக்கு மேம்பட்டவர் ஒருவரும் இராரென்றே துணிந்து கூறலாம்.

இவர் வியாபாரத்தை விட்டு, இல்லத்திலிருந்து காலங்கழித்து வருங்காலத்தில், நியூபவுண்ட்லாந்து என்ற தீவிலுள்ள ஜான்ஸ் என்ற இடத்தை நியூயார்க் என்னும் இடத்துடன் தந்தி மூலமாக இணைக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு ஒரு கம்பெனி ஸ்தாபிக்கப்பட்டது. இந்தக் கம்பெனியார், பீல்ட் என்பவரை இவ் விஷயத்தில் தங்களுக்கு உதவி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்கள். அவர்களுடைய நோக்கம் நன்மை பயக்கக்கூடிய தானாலும், இங்கிலாந்தையும் அமெரிக்காவையும் தந்திக் கம்பிகளால் இணைத்தலால் உண்டாகும் பிரயோசனம் இதனினும் மேலானதாகும் என்று பீல்ட் மொழிந்தார். இதுவே இங்கிலாந்திற்கும் அமெரிக்காவிற்கும் இடையிலுள்ள அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் தந்திக் கம்பிகள் போடுவதற்கு மூலகாரணமாயிற்று.

" சொல்லுதல் யார்க்கும் எளிய ; அரியவாம்
சொல்லிய வண்ணஞ் செயல்."

என்றபடி இது ஒரு மகாகஷ்ட மான வேலையாய்த் தோன்றிற்று. இரண்டு தேயங்க ளுக்கும் இடையில் சுமார் 2000 மைல் தூரமுள்ளசமுத்திரத்தில், ஒரு முனையிலிருந்து மற்றோர் முனைவரைக்கும் போடத் தகுந்த பலமுள்ளதும் அதிக பாரமில்லாததுமான கம்பியொன்று செய்யமுடியுமா என்ற விஷயம் அநேகர்

மனத்தில் சந்தேகத்தை எழுப்பியது. பின்னர், மின்சாரம் ஜலததிற்குள் 2000 மைல் தூரத்திற்குச் செல்லக்கூடுமா என்ற எண்ணமும் பிறந்தது.

சாஸ்திர சம்பந்தமாய்ப் பல பரிசோதனைகள் செய்யப்பட்டுக் கடைசியில் அருமையான இவ்விரண்டு காரியங்களும் தொடங்கிச் செய்து முடிக்கக் கூடு மென்று கண்டுபிடிக்கப்பட்டது. பிறகு தந்திக்கம்பி கள் ஜலத்தில் படியும்படியான சமுததிரத்தின் ஆழத் தைக் கண்டுபிடிப்பது அவசியம் என்று ஏற்பட்டது. நியூ பவுண்ட்லாந்திற்கும் அயர்லாந்திற்கும் இடையில் சமுத்திரத்தின் திட்டமான இடத்தில் 9000-ம் அடியி லிருந்து 12,000 அடியென்று ஆழம் கண்டுபிடித்துக் கணக்கிடப்பட்டது.

மேற்குறித்த காரியத்தை நிறைவேற்ற பீல்ட் என் பவர் ஒரு கம்பெனியை ஸ்தாபித்தார். அதைப் பார்த்து அநேகர் பரிகாசஞ் செய்தனர். ஆனால் இரசாயன சாஸ் திரிகள் இருவர் மாத்திரம் இவரை உற்சாகப்படுத்தினர். 1857-ம் வருஷம் கோடைக் காலத்தில் இந்த வேலை ஆரம்பிக்கப்பட்டது. இரண்டு கப்பல்களில் வேண் டிய அளவு கம்பியை இருபாகமாக எடுத்துக்கொண்டு சமுத்திரத்தின் மத்தியில் சென்று இரண்டு துண்டுகளை யும் ஒன்றாக இணைத்து, இரண்டு கப்பல்களில் ஒன்று மேற்கு முகமாகவும் மற்றொன்று கிழக்கு முகமாகவும் புறப்பட்டு இருகரை சேருமளவும் கம்பியைத் தண்ணீ ரில் போட்டுக்கொண்டே பிரயாணம் செய்ய ஏற்பாடா யிற்று.

மரக்கலங்கள் இரண்டும் 1857-ம் வருடம் ஜூன் மாதம் 28-ம் தேதி யன்று சமுத்திரத்தின் மத்திய

ஸ்தானத்தை யடைந்து கம்பியின் இருமுனைகளையும் ஒட்டவைத்துக் கம்பியைத தண்ணீரில் தளர்த்திவிட்டு இரண்டு திசைகளையும் நோக்கிப் புறப்பட்டுச் சென்றன. பின்பு கம்பியோ, பிணைக்கப்பட்ட இடத்தில் அறுந்துபோயிற்று. மும்முறை இவ்வாறு பிரயத்தனப்பட்டும் பயன்படாமற் போய்விட்டது. இரு கப்பல்களும் அயர்லாந்து தேசத்திற்குத் திரும்பின.

பின்னர் வேறொரு முறையானது புதிதாகச் செய்யத் தீர்மானிக்கப்பட்டது. அதாவது, ஒரு முனையைக் கரையிலேயே பலமாய்க் கட்டிவிட்டு, ஒரு கப்பல் மேற்கு முகமாகப் புறப்பட்டுக் கம்பியைத் தண்ணீரில் போட்டுக்கொண்டே செல்லவேண்டும் என்பதும், நடுச் சமுத்திரத்திற்கு வந்தவுடன் மற்றொரு முனையை எடுத்த கப்பலில் இருக்கும் கம்பியில், ஒரு முனையோடு சேர்த்துப் பிணைத்து, எஞ்சின கம்பியைத் தண்ணீரில் போட்டுக்கொண்டு செல்ல வேண்டும் என்பதுவுமே.

ஏறக்குறைய 355 மைல் தூரம் சென்ற பிறகு கம்பி அறுந்து ஜலத்தில் அமிழ்ந்து போயிற்று. இம்முறையும் தவறிப்போனதை யறிந்து, கம்பெனியின் அங்கத்தினர் பலர் வருத்தமுற்று மீண்டும் பீல்ட்டுக்கு உதவிசெய்ய மறுத்தனர். பீல்ட் சிறிதும் மனந்தளராமல் மற்றும் ஒரு முறை அம் முயற்சியை மேற்கொண்டார்.

1858-ம் ஆண்டு வேனிற் காலத்தில் இவ்விரு கப்பல்களும், கம்பியை இருபாகமாக எடுத்துக் கொண்டு போய்ச் சமுத்திரத்தில் நின்று, இரு நுனிகளையும் ஒன்றோடொன்று இணைத்துவிட்டு, ஒன்று அமெரிக்காவிற்கும் மற்றொன்று அயர்லாந்திற்கும் நேராகப் பிரயாணஞ்

செய்தன. இந்தத் தடவை அவை யாதொரு ஆபத்து மில்லாமல் சமுத்திரத்தின் இருகரை வரையில் சென்றன. கம்பிகளும் ஒரு முனையிலிருந்து மற்றொரு முனை வரைக்கும் சமுத்திரத்தில் போடப்பட்டன.

முதன்முதலாக இதன் மூலம் அனுப்பப்பட்ட தந்தி சமாசாரம் என்னவென்றால் "இங்கிலாந்தும் அமெரிக்காவும் தந்தியால் இணைக்கப்பட்டிருக்கின்றன. உன்னதத்தில் இருக்கிற தேவனுக்கு மகிமையும், பூமியிலே சமாதானமும் மனிதர்மீது பிரியமும் உண்டாவதாக" என்பதே. இங்கிலாந்தில் அரசாண்ட விக்டோரியா மகாராணியும், அமெரிக்காவின் தேசாதிபதியும் சுப சோபனோபசாரங்கள் அனுப்பினார்கள். அப்பொழுது ஜனங்களுக்கு உண்டான மன மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையில்லை.

ஆனால் 'தண்ணீருக்குள் போடப்பட்ட கம்பி மூன்றுவாரத்திற்குமேல் பயன்படாமற் போய்விட்டது. இதைக்கேள்வியுற்ற இருதேசத்தாரும், தாங்கள் முன்பு அடைந்த சந்தோஷத்தை நினைத்து வெட்கங் கொண்டார்கள். முன்பு, தந்தி சமாசாரம் அனுப்பப்பட்டது உண்மைதானென்றுஞ் சந்தேகித்தார்கள். அந்தச் சமயத்தில் இந்த விஷயத்தைக் கேள்வியுற்ற பீல்டின் மனநிலைமை எவ்வாறு இருந்திருக்கும்? ஜனங்களின் பரிகாசமான பேச்சு ஒரு பக்கம் வருத்தத் தன் இனத்தாரும் உற்ற நண்பரும், உயிருக்குயிரான மனைவியும் இம்முயற்சி வீண் என்று கூறுவது பீல்ட்டுக்குப் புண்ணில் தீக்கோலிட்டாற் போலிருந்தது. இவர் கோழை நெஞ்சமுடையவரா யிருந்தால் எடுத்த கருமத்தைக் கைநெகிழ விட்டிருப்பார். அவ்வாறின்றிச் சற்றேனும்

மனந்தளராமல் குன்றுப் பெருமுயற்சிகொண்டு மீண்டும் ஒரு முறை அவ்வரிய தொழிலைச் செய்து முடிக்க உடன்பட்டார்.

தண்ணீரில் விடப்பட்ட கம்பி கெட்டுப்போகாமலும், மின்சாரம் ஊடுருவிச் செல்லத்தக்க தன்மைவெளியில் போகாமலும் இருத்தற்குரிய ஏற்பாடுகள் செய்யுமாறு இரசாயன சாஸ்திரிகளைக் கொண்டு எத்தனிக்கப்பட்டது. 1864-ம் வருஷம் இவ்வேலை திரும்பவும் ஆரம்பிக்கப்பட்டது. மின்சாரம் செல்லும் கம்பியானது ஒரே கம்பியாக இராமல் ஏழு செப்புக் கம்பிகளால் நன்றாய் முறுக்கப்பட்ட கம்பியொன்றாகச் செய்யப்பட்டது. இக்கம்பி ஒன்றின்மேல் ஒன்றாய்ப்போடப்பட்ட மூன்று ரப்பர் குழாய்களில் பொதியப்பட்டது. ரப்பர் குழாயோ கீல் பூசப்பட்ட சணலால் மூடப்பட்டுள்ளது. இவை நுட்பமான பதினெட்டு இரும்புக் கம்பிகளால் முடிந்த கொடியால் சுற்றப்பட்டது. பாரமுள்ள இந்தக் கம்பியைத் தண்ணீரில் விடும்படியான ஒரு யந்திரமும் அமைக்கப்பட்டது.

1865-ஆம் வருஷம் வேனிற் காலத்தில் இந்தக் கப்பல் புறப்பட்டு மேற்கு முகமாய்ச் சென்று 1,200 மைல் தூரம் கம்பியை ஒரு யந்திரத்தின் வழியாய்த் தண்ணீரில் போட்டுக்கொண்டு சென்றது. அந்தச் சமயமும் கம்பி திடீரென அறுந்து விழுந்துவிட்டது. அந்தக் கம்பியை யெடுக்கப் பிரயத்தினப்பட்டும் அம் முயற்சி பயனற்றதாயிற்று. கப்பலோ புறப்பட்ட துறை முகம்வந்து சேர்ந்தது. இம்முறையும் தவறியதற்குப் பீல்ட் சிறிதும் சோர்வடையாமல், மனத்திட்பம் குன்று

மல், எடுத்த கருமத்தை எவ்வாறாயினும் நிறைவேற்ற வேண்டுமென்று ஊக்கங்கொண்டார்.

அதே வருஷம், மறுமுறை அந்தக் கப்பலே, கம்பியின் ஒரு முனையை அயர்லாந்து தேசத்தில் வேலன்ஷியா என்ற துறைமுகத்தில் பலமாகவும் பத்திரமாகவும் ஊன்றச் செய்து, மேற்குத் திசைவழியாகக் கம்பியைத் தண்ணீரில் போட்டுக்கொண்டே சென்றது. இவ்வாறு பதினைந்து நாட்களில் யாதொரு இடையூறுமில்லாமல் அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் ஒரு முனையிலிருந்து ஏறக்குறைய 2,000 மைல் தூரமுள்ள மற்றொரு கரைக்கும் தந்திக்கம்பி போடப்பட்டது. இம்முறையும் அமெரிக்காவின் ஐக்கிய மாகாணங்களின் தேசாதிபதியும், இங்கிலாந்து மஹாராணியும் சுபசோபனைசாரப் பத்திரங்கள் அனுப்பினார்கள். முடியாத காரியம் என்று பலர் கருதிய இக்கருமம் இனிது கைகூடிற்று. பலமுறை தவறினாலும் பீல்ட் தனது விடா முயற்சியால் சித்தி பெற்றார்.

" ஊழையும் உப்பக்கம் காண்பர் ; உலைவின்றித்
தாழாது உஞற்று பவர். " —திருக்குறள்

## 10. பெருமிதம் அல்லது பெருமை

" அழிவுக்கு முன்னனது அகந்தை
விழுகைக்கு முன்னனது வீறுப்பு"

பல்லாண்டுகளுக்கு முன்னர் ஒரு வேந்தன் இருந்தான். அவன் தன்னிடத்திலுள்ள அகந்தைக் குணத்தினால் தன்னைப்பற்றி அளவுக்கு மிஞ்சிய மதிப்புக் கொண்டிருந்தான். இயற்கையிலேயே பெருமையைச்

சரப்பணிபோல் அணிந்தவன். அவனுக்குக் கப்பங்கட்டு கிற சிற்றரசர்கள் பலருண்டு. அவர்கள் எல்லோரும் இவ் வேந்தனது பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே பெட்டிப் பாம்புபோல் நடுங்குவார்கள். அவன் சிங் காதனத்தில் வீற்றிருக்கும் பொழுது, அவனுடைய அகமுடையாள் அவனுடைய பாதத்தின் அருகில்தான் உட்காரலாம்.

ஒரு நாள் அவன் மனத்தில் பற்பல எண்ணங்கள் உதித்தன. "நான் ஏகசக்ராபதி. சாதாரண மனி தர்கள் கடவுளை வணங்குகிறார்கள். நானே கடவுள். மனிதர்கள் என்னையே பூஜிக்கவேண்டும். என் பாட்ட ஞர் அரசாண்டது ஒரே பட்டணம். அவருடைய அரண் மனை இருந்த இடத்தில், இப்பொழுது நான் வேட்டை நாய்களுக்காக ஒரு வீடு கட்டியிருக்கின்றேன். எனது தந்தையோ சில பட்டணங்களுக்கு அதிகாரியாயிருந் தார்; என்னுடைய இராஜ்யமோ மிகவும் விஸ்தாரமா னது. சூரியன் அஸ்தமிக்காத ராஜ்யமென்று யாவரா லும் சொல்லப்படத்தக்கதாய் மிகப் பெரியதாக உள் ளது. இயமன் சாதாரண ஜனங்களைத் தனது பாசக் கயிற்றால் இழுத்துச் செல்வான். அவனே என்னைக் கண்டால் நடுங்குவான். எனக்கு மரணமே கிடையாது" எனப் பலவாறு தனக்குள்ளே சொல்லிக்கொண்டு அகமகிழ்ந்தான்; இவ்வித மனோராஜ்யம் செய்து கொண்டே நித்திரை செய்தான்.

'வைகறைத் துயிலெழு' என்று ஔவையார் கூறி யுள்ளதற்கு மாறாக அவ்வரசன் அன்று வெகு நேரங் கழித்துப் படுக்கையிலிருந்து எழுந்தான். வழக்கப் படி காலையில் வேட்டைக்குப் போக வேண்டியதற்கு

உரிய கருவிகளோடு ஏவலாளரை ஆயத்தமாக இருக்கும்படி கட்டளையிட்டான். பிறகு காலைக்கடனை முடித்துக்கொண்டு, அறுசுவை உண்டி அருந்தி, அலங்கார மான உடைகளைத் தரித்தவனாய்க் காற்றைப்போல் மிக விரைவாய் ஓடக்கூடிய குதிரை யொன்றின்மீது ஏறிக் கொண்டு காட்டிற்கு வேட்டையாடச் சென்றான். அவனுடைய பரிவாரங்களும் பின்சென்றன. அவனது புரவி மிக வேகமாயோடினதால் அவனைத் தொடர்ந்து சென்ற யாவரும் பின்தங்கி விட்டார்கள். அவன் மாத்திரம் தனிமையாக ஓர் அடவியிற் பிரவேசித்தான்.

சூரிய கிரணத்தின் வெப்பத்தினால் பீடிக்கப்பட்ட அரசன் சிறிது இளைப்பாற விரும்பினான். பின்பு அங்குள்ள காணாற்றில் பளிங்குபோல் தெளிந்த நீர் ஓடுகிறதைக் கண்ணுற்று, அதில் நீராடினால் தேகத்திற்கு ஆரோக்கியம் உண்டாவதுமன்றி, மனத்திற்கு இன்பத்தையும் கொடுக்கும் என்று எண்ணிப் பரியை விட்டுக் கீழே இறங்கி, அப் பரியை ஒரு மரத்தில் கட்டிவிட்டுத், தன் உடைகளைக் களைந்து புல்தரையின்மீது வைத்து விட்டு, ஜலத்தில் இறங்கி நெடுநேரம் நீராடினான். ஸ்நாநம் செய்த பின் கரையின்மீது தான் வைத்திருந்த உடுப்புகளைத் தரித்துக்கொள்ளச் செல்லுகையில் விலையுயர்ந்த தன் ஆடைகளும் பரியும் காணாமற் போனதை அறிந்து ஆச்சரியமும் கோபமும் அடைந்தான்.

'பாவும் குழலும் போல' நாலுத் திசைகளிலும் ஓடி அவற்றைத் திருடிக்கொண்டு போனவனைக் கண்டு பிடிக்கப் பிரயத்தனப்பட்டான். திருடனோ மாயமாய் மறைந்துவிட்டான். அரசனோ நிர்வாணமா யிருந்தான். இரவியின் கிரணம் அவனைத் தாக்கிற்று. அதைத்

தாங்க முடியாமல் சோர்வுற்றுக் கீழே விழுந்தான். திருடன் தன் கையில் அகப்பட்டால் அவனைக் கொசுவை நசுக்குவதுபோல் கொன்று விடுவேன் என்று பற்களை நெறு நெறு என்று கடித்து உறுமினான்.

அப்பொழுது அவனுக்கு, அவனது நண்பனும் இராஜாங்க உத்தியோகஸ்தனுமான ஒருவன் அப் பக்கத்தில் வசிப்பதாக நினைவுக்கு வந்தது. உடனே அவன் வசிக்கும் திசையை நோக்கி நடந்து, தனது சிநேகிதனை காட்டிலாகா அதிகாரியின் வீட்டை அணுகினான். அங்குச் சென்று, தான் அத் தேசத்தின் அரசன் என்றும் தனது நேசனைக் காண விரும்பி வந்ததாகவும் அங்கிருந்த வேலைக்காரர்களிடம் சொன்னான். அவர்கள் அவனிருக்கிற நிலைமையைப் பார்த்து அவனைப் பரிகசித்தார்கள். அவனுக்கோ கோபம் அதிகரித்தது. வேலைக்காரர்களில் ஒருவன் கதவைத் தாளிட்டு உள்ளே சென்று எஜமானனை நோக்கி, "ஆடையில்லாத மனிதன் ஒருவன் இங்கு வந்திருக்கிறான். அவன் தன்னை அரசன் என்று சொன்னதுமன்றித் தங்களைப் பார்க்க விரும்புவதாகவும் கூறுகிறான்" என்று பகர்ந்தான். இதைக் கேட்டதும் அந்த அதிகாரி, வாயிலில் காத்திருப்பவன் பைத்தியக்காரனாக இருக்கலாம் என்று நினைத்து, அவனை உள்ளே அழைத்துக்கொண்டு வரும்படி கட்டளை யிட்டான். அவ் வேலைக்காரர்கள் அவனைக் கூப்பிட்டு உட் செல்லச் சொன்னதும் உள்ளே சென்ற இவ்வரசன் அக் காட்டு அதிகாரியைப் பார்த்து, "நண்பா, நான் யார் என்று தெரியவில்லையா?" என்று வினவினான். அவனோ அந்தப் பேச்சைக்கேட்டு நகைத்தான். பின்பு அதிகாரி அவனை நோக்கி, "உண்மையான வேந்தன் நீ கூறிய

விஷயத்தைக் கேட்டால் உன்னை நிர்த்தாட்சணியமாய்க் கழுவில் ஏற்றி விடுவான். ஆகையால், இவ்விதமாகப் பிறரிடம் சொல்லாதிருக்கவேண்டும்" என்று உத்தரவு செய்து, அவனுக்கு ஒரு பவுன் கொடுத்துத் தனக்கு வேண்டிய உணவுகளையும் உடைகளையும் வாங்கிக் கொள்ளவும் சொன்னான்.

இறுமாந்திருந்த இறைவனுடைய கண்களில் அப்பொழுது நெருப்புப் பொறி பறந்தது. பிறர் தன்னை அரசன் என்று மதியாமல் பிச்சைக்காரனைப் போல் நடத்துவதை நினைத்து, அதிகாரியை நோக்கி, அவனை இராஜத்துரோகி யென்று கூறி, அவனையும் அவன் வீட்டையும் சுட்டெரிப்பதாகப் பயமுறுத்தினான். அவன் பணியாட்கள் இவனது கைகளை இறுகப் பிடித்துக்கொண்டார்கள். இவன் அவர்களது பிடியிலிருந்தும் திமிறிக்கொண்டு வெளியே ஓடினான்; பின்பு களைப்படைந்தவனாய் வழியோரத்தில் படுத்துறங்கினான்.

சிறிது நேரத்திற்குள், குதிரைகளின்மீது ஏறிக்கொண்டு பலர் அவ்வழியாய்த் திரண்டு வருவதைக் கண்டான். அப்போது இருள் சூழ்ந்திருந்தமையால் அநேகர் தீவர்த்திகளைப் பிடித்துக்கொண்டு முன்னர் வருவதையுங் கண்ணுற்றான். அவர்களுக்குப் பின்னர் பல போர் வீரர்கள் வந்தார்கள். அவர்கள் அணிந்திருந்த உடைகளினால் அவர்கள் தன்னுடன் பகை பாராட்டிய ஒரு பிரபுவின் வேலைக்காரர்கள் என்று அறிந்துகொண்டான்.

இவர்களுக்குப் பின்னால் பல்லக்கில் ஒரு பிரபு வந்தார். அந்தச் சிவிகையைப் பார்த்தவுடன் அரசன் எழுந்

திருந்து, அதில் உட்கார்ந்திருந்த பிரபுவை நோக்கி, "நீ வெகு சமர்த்தன். என்னுடைய ஆளுகைக்குட்பட்ட இடத்தில் ஒரு துரோகி, அரசனாக வீற்றிருக்கிறான். அவனோடு சிநேகம் பண்ண விரைவாய் அங்குச் செல்கிறாய். உன் காரியம் பலிக்காது" என்றான். அங்கிருந்த வேலைக்காரர்களில் ஒருவன், உடனே இவனது கன்னத்தில் பளீரென்று ஒரு அறை அறைந்தான். இவன் மனங்கலங்கி நின்றான். பிரபு, பல்லக்கை நிறுத்திப் பைத்தியக்காரனைப்போல் பேசிய இவனைத் தன்னிடம் அழைத்து, "உனக்கு ஏதாவது மனக்குறை யிருக்குமானால், நாளைய தினத்தில் எனது சமஸ்தானத்தில் தெரிவித்தால், நான் அதை நிவர்த்திக்கக் கூடும்" என்று மொழிந்தான். இவன், தீவர்த்திகளைத் தன்னருகில் கொண்டு வரச்சொல்லி, அப்பிரபுவைப் பார்த்து, "என் முகத்தை நன்றாய் உற்றுப்பார். நான் உன்னுடைய வேந்தன். என்னை நீ தெரிந்து கொள்ளவில்லையா?" என்று கேட்டான். பிரபுவோ, "நீ ஒரு பைத்தியக்காரன். இவ்விதம் மற்றவரிடம் சொன்னால் தடையில்லாமல் நீ உன் உயிரை இழப்பது நிச்சயம்" என்று கூறி, விரைவில் அவ்விடம் விட்டு ஏகினன். இதைக் கண்ணுற்ற அரசன் ஊமையைப் போல் நின்றான்.

சற்றுப் பொறுத்து இன்னது செய்வதென்றறியாமல், முன் சென்ற படைத்திரளைப் பின் தொடர்ந்து ஓடினான். வெகுநேரம் ஓடியதால் களைப்புமேலிட்டு வழியோரத்தில் படுத்து அயர்ந்து நித்திரை செய்தான். விடியற்காலையில், விழித்தெழுந்ததும் தான் தனது நகரத்திற்கு அருகில் வந்திருப்பதாக அறிந்

தான். பட்டணத்துப் புறவாயில்கள் அப்பொழுது திறக்கப் படாமையால், திரளாக வந்த வர்த்தகர்கள் தாங்கள் கொண்டுவந்த பண்டங்களோடு வெளியே காத்துக் கொண்டிருந்தார்கள். அங்கு நின்று கொண்டிருந்தவர்களிற் பலர் இவனுடைய நிலைமையைக் குறித்து ஏளனஞ் செய்தனர். ஆனால் அங்கிருந்தவர்களில் ஒருவன் இவன்மீது இரக்கமுடையவனாய் இவனுக்குச் சிறிது பாலும் ரொட்டியும் கொடுத்து உபசரித்து, இவனது வரலாற்றைத் தெரிவிக்க வேண்டினான்.

அதுவரையில் தான் அடைந்த அவமானங்களைக் குறித்து மனம் நொந்தவனாய், அவன், தான் கள்ளர் கையில் அகப்பட்டுத் தன்னுடைகளை இழந்ததாகவும், இனி அந்நகரத்திற்குள் அழைத்துச் சென்றால் அங்கு எளிதில் தனது நண்பர்களிடத்தில் உடைகளைப் பெற்றுக்கொள்ள முடியும் என்றும் கூறினான். அவ் வர்த்தகனும் இவனை ஒருவரும் அறியாதபடி தனது வண்டியில் ஏற்றிக்கொண்டுபோய், நகரின் வாயிற் கதவுகள் திறக்கப்பட்டவுடன் உள்ளே சென்று, இவனை அங்கே வண்டியினின்றும் இறக்கிவிட்டான்.

இறங்கின உடனே இவன், அரண்மனை வாயிலை நோக்கிச் சென்றான். அங்கிருந்த காவற்காரன் இவனை உள்ளே செல்லாதபடி தடுத்து விட்டான். காவற்காரனிடத்தில், தான் உண்மையில் அரசனென்று நயமாகவும், பயமுறுத்தியுங் கூறினபோதிலும், அவனுக்கு யாதொரு பிரயோசனமும் உண்டாகவில்லை. அவ் வேலைக்காரன் இவனை ஒரே பிடியாய்ப் பிடித்துக் கொண்டுபோய் அங்கு வீற்றிருக்கும் மன்னன்முன் நிறுத்தினான். தனது சிங்காதனத்தில் சிறந்த மகிமை

யுள்ள ஒரு அரசன், கையில் செங்கோல் ஏந்தி வீற்றிருப்பதையும், அவன் பாதத்திற்குச் சமீபத்தில் தன்னுடைய பட்டமகிஷி உட்கார்ந்திருப்பதையும், சபையில் பல தனவான்களும், பிரபுக்களும் கூடி நிற்பதையும் கண்டு இவன் திகைப்புற்று நின்றான்.

அரியணையில் அமர்ந்திருந்தவன் இவனைநோக்கி, "நீ யார்?" என்று கேட்டான். அதற்கு இவன், "நேற்று நான் இங்கு அரசனாயிருந்தேன். இப்பொழுது நீ இச் சிம்மாதனத்தில் வீற்றிருக்கிறாய். நீ என்னைக் கொல்லக் கூடும். என்னை அறிந்து கொள்ளக் கூடிய நண்பன் ஒருவனாவது இங்கு இல்லாவிட்டாலும், நான் உண்மையான வேந்தன் என்ற வாய்மையை மாற்ற முடியாது" என்று தைரியத்தோடு பதிலுரைத்தான். அதற்கு அப்போலி மன்னன், "நீ பெரியமுட்டாள். நான் எக் காலத்திலும் இத் தேசத்துக்கு அரசனாயிருப்பவன். உன்னுடைய இறுமாப்புக்கு மரண தண்டனை விதிக்கவேண்டும். ஆனால் உன்னைக் கொலையாளர் வசம் ஒப்புவிக்குமுன் நான்தான் உண்மையான அரசன் என்பதை நிரூபிப்பேன்" என்று சொன்னான்.

உடனே அவன், இராணியையும் சபையோரையும் நோக்கி, "நான் உங்கள் இறைவனா? அல்லனா?" என்று வினவினன். எல்லோரும் ஒருமுகமாக, 'வேந்தனே! வாழ்க" என்று மொழிந்தார்கள். அரசியும் அரியணையில் அமர்ந்திருப்பவர்தான் தனது கணவனான அரசன் என்றாள்.

பின்பு, சிங்காதனத்திலிருந்த மன்னன் தன்முன் நிற்கிறவனைப் பார்த்து, "இப்பொழுதாவது நீ இழி

குலத்தில் பிறந்தவன் என்பதை ஒப்புக்கொள்ளுகிருயா? நீ முழந்தாளிட்டு வணக்கத்துடன் பித்தன் என்றும், அரசன் அல்லன் என்றுஞ் சொல்லி மன்னிப்புக் கேட்டுக் கொண்டால், உன்னைக் கொல்லாமல் விட்டுவிடுகிறேன்" என்று கூறினுன். அதற்கு அவன், 'மானம் அழிந்தபின் வாழாமை முன் இனிதே' என்னும் நீதிக்கிணங்க உயிரை இழந்தாயினும் மானத்தைக் காத்துக் கொள்ள நிச்சயித்தவனுய், "நீ சொல்வது நியாயமல்ல. நானே உண்மையான இறைவன். நீ என்னை உன் கையால் கொன்றாலும் கொல். அதற்கு நான் சிறிதும் அஞ்சேன்" என்றான்.

பிறகு அந்தப் போலி மன்னன், "நீ தைரியசாலி. உன் வீரத்தைக் கண்டு வியந்து உனக்கு உயிர்ப் பிச்சை கொடுத்தேன். இனி நீ பட்டணத்திற்கு வெளியே சென்று, சாதாரண மனிதனைப்போல் தாழ்மையோடு வாழ்ந்துவா. உனது வீணை மனோராஜ்யத்தை மறந்து விடு" என்று கூறி அவனை வெளியே துரத்தும்படி கட்டளை யிட்டான்.

இவ்விதமாகத் துரத்தப்பட்ட வேந்தன், வனத்திற்குப் போய் அங்கிருந்த ஒரு சந்நியாசியின் பர்ண சாலையை யடைந்து, வாயிற் கதவைத் தட்டினுன். உள்ளே இருந்த துறவி, "நீ யார்?" என வினவினர். "முனிவரே, நான் அரசன் என்று நீர் தெரிந்து கொள்ளவில்லையோ?" என்றான். முனிவர், "நீ ஒரு பைத்தியக்காரன். உனக்கு உதவி வேண்டுமானல் இவ்விதமாய் வீண் கதைகள் ஒன்றும் பேசவேண்டிய அவசியமில்லை. நீ கொண்ட செருக்கும் பாவமும் ஒழிவதற்காகக் கடவுளைத் தியானித்து வேண்டிக் கொள்

வாய்" என்று கூறினர். உடனே அவன் அழுகை யோடும் பெருமூச்சோடும் கூடியவனாய், முழந்தாளிட்டுச் செருக்கு நீங்கி, முழுமனத்துடன் தனது வாழ்நாளில் கடவுளை நோக்கிப் பிரார்த்தித்தது இதுதான் முதல் தடவையாகும். கடவுளும் அவனது வேண்டுகோளை மனமிரங்கி அங்கீகரித்தார். பிரார்த்தனை முடிந்தவுடன் எழுந்து நின்ற அவனை, முனிவர் அரசன் என்றே அறிந்து ஆச்சரியப்பட்டுத் தான் காண்கிறது கனவோ, நனவோ என்று ஐயுற்றார். வேந்தன் அகமகிழ்ந்து துறவியைப் பார்த்து, "நீர் என்னை இப்பொழுதுதான் இன்னான் என்று அறிந்து கொண்டீர். என் குற்றத்தைக் கடவுள் மன்னித்தார் என்று அறிகிறேன். எனக்கு ஏதேனும் உண்ண உணவும் உடுக்க உடையும் தரல் வேண்டும். நான் என் அரண்மனைக்குத் திரும்பிச் செல் வேன். முதலில் எனது தீயசெயல்களும் செருக்கும் என்னைவிட்டுநீங்கும்படி, எனக்கு அநுக்கிரகஞ் செய்ய வேண்டும்" என்று வேண்டினன். துறவியும் அவனது வேண்டுகோளின்படியே அவனுக்கு அருள் செய்தார். பிறகு மன்னன், முனிவர் கொடுத்த மென்மை இல்லாத அநாகரிகமான உடையைத் தரித்தவனாய், அரண் மனையை நோக்கிப் புறப்பட்டுச் சென்றான்.

நகரத்தின் வாயிலை அணுகியதும், அங்கிருந்த வாயிற்காப்போர் இருவரும் மரியாதையாய் ஒதுங்கி நின்று அவனுக்கு வழிவிட்டார்கள். அவர்களில் ஒருவன் மற்றொருவனை நோக்கி, "இவர் இராஜா. இன்றைக்கு இவர் மாறுவேடம் தரித்துக்கொண்டு இவ்வழியாய் வருவதாகவும், தமக்கு ஒருவரும் எவ்வித மான மரியாதையுஞ் செய்யக்கூடாதென்றுங் கட்டளை

யிட்டு இருக்கிறார்'' என்று மெல்லிய குரலுடன் சொன்னான். வேந்தனும் புன்சிரிப்புடன் தெருவழியே சென்றான். ஜனங்கள் அவனை அரசனென்று அறிந்தும், அந்தரங்கமாய்க் கொடுக்கப்பட்ட கட்டளைப்படியே ஒருவரும் மரியாதை செய்யாமல் வழிவிலகி நின்றார்கள். அரண்மனை வாசலில் நின்றுகொண்டு, அவரது வரவை எதிர்பார்த்துக் காத்திருந்த ஒரு பிரபு, அவர் வந்ததும், "அரசரே, உமது ஆணையின்படியே அரசியார் சங்கீத அறையிலே உமது வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்'' என்று பகர்ந்தார்.

அப்பொழுது காவலனது சந்தேகங்கள் எல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் மறைந்துபோய் விட்டன. என்றாலும், தன்னுடைய ஸ்தானத்தில் அரசனாய் அமர்ந்திருந்தவனை நினைத்தவுடன் மனந்தடுமாறிற்று. அதன் இரகசியம் யாதாயிருக்கும் என்று அறிய விருப்பங் கொண்டான். அரசி, சங்கீத அறையில் சித்திரத் தையல் அமைந்த ஆடையொன்றைக் கையில் கொண்ட வண்ணமாய்த் தன்னைக் காணக் காத்திருப்பவள்போல் அவனுக்குப் புலப்பட்டது. ஆனால் அவளருகில் இராஜ உடைகளை உடுத்து, கைவிரலில் முத்திரை மோதிரம் அணிந்து, கிரீடத்தைத் தலையில் தரித்து, போலியரசன் வாடிய முகத்துடன் நின்றுகொண்டிருந்தான். அப் போலி உருவைக் கண்டதும் அவனுக்குக் கோபம் பொங்கி யெழுந்தது. அவனோடு பேச ஆரம்பிக்குமுன் அற்புதமான காட்சி ஒன்று தோன்றிற்று. போலி அரசனுடைய உடைகள் வெண்மையாக மாறின. அவனைச் சுற்றி நாற்புறத்திலும் சிறந்த பேரொளியொன்று விளங்கியது. அவனுடைய தோள்களிலிருந்து

சிறகுகள் தோன்றின. அவ்வுருவத்தைக் கண்டு நிருபன் நடுங்கினன்.

உடனே அத் தோற்றம் பரிசுத்தமான குரலோடு, அரசனை நோக்கி, "அஞ்சற்க. உன்னைத் தனவானாகவும், பராக்கிரமசாலியாகவும் படைத்த கடவுள், ஒரே நாளிலே உன்னுடைய உருவத்தை மாற்றுமலேயே, உனது சகல சம்பத்துக்களையும் பெருமையையும் அகற்றி, அற்ப மானிடராலும் இகழப்படத்தக்க விதமாய், உன்னை உன்னத பதவியிலிருந்து தள்ளக் கூடிய திறமையை யுடையவர் என்னும் விஷயத்தைத் தெரிந்துகொண்டாய். ஆதலால், நீ ஒரு கொற்றவன் என்று பெருமை கொள்ளாதே. கடவுளுடைய சிருஷ்டியில் நீயும் ஒருவன் என்பதை மறவாதே" என்று சாற்றிய பின்னர் மறைந்தது.

மாய வரசன் மறைந்ததும், பட்டமகிஷியும் நித்திரையிலிருந்து விழித்தவள்போல் எழுந்து, பார்த்திவனைப் பார்த்து, "போஜன அறையில் அநேகர் காத்துக் கொண்டிருக்கிறார்கள்; வாருங்கள் போவோம்" என்று அழைத்தாள். அரசன் ஆடம்பரமான ஆடை அணிந்துகொண்டு போஜன அறைக்குச் சென்றான். அங்குக்கூடி யிருந்த மந்திரி பிரதானிகள் வழக்கம் போல் அவனுக்கு மரியாதை செய்தார்கள்.

நாள் செல்லச் செல்ல நடந்த சப்பவங்களெல்லாம் அவன் மனத்தில் அடிக்கடி ஞாபகத்திற்கு வந்தன. பின்பு அவ்வரசன், தனது வாழ்நாள் குறுகிய காலத்துத், தான், தன் வீண்பெருமையினுல் அடைந்த அவமானத்தைத் தனக்குப் பின்புள்ளார் அறிந்து, வீண் செருக்கு ஒழிந்து, அடங்கி வாழ்வது நலம்

என்பதை உணர்ந்துகொள்ளும் பொருட்டு, ஒரு சாச னத்தை எழுதி வைத்தான். 'வீண்பெருமை பாராட்டு பவன் விரைவில் அழிவான்' என்பதை இக்கதையினால் நாம் அறிகிறோம்.

அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். —திருக்குறள்

## 11. தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்

இத்தாலியா தேசத்தில், நேப்பில்ஸ் என்ற ஓர் சிறந்த பட்டணமுண்டு. அந்த நகரத்தில், சிறுவர்கள் கூட ஐந்து ஆறு வயதிலேயே ஏதாவதொரு தொழில் செய்யக் கற்றுக்கொள்வது வழக்கம். சிலர் பழம் விற் பார்கள்; சிலர் மீன் விற்பார்கள்; வேறு சிலர் விறகு முத லியன விற்பார்கள். அச் சிறுவர்கள் சொற்ப விலையுள்ள சாமான்களை எடுத்துக்கொண்டு, நகரத்தின் முக்கிய மான வீதிகளில் கடைகள் வைத்து, அற்ப இலாபத் திற்குத் தங்கள் வசமுள்ள பண்டங்களைப் பிறர்க்கு விற் பது வழக்கம். சிறுவயதிலேயே வியாபாரத்தில் ஈடு பட்டு, உண்மையும் நேர்மையும் வியாபாரிகளுக்கு இன்றி யமையாத குணங்கள் என்று அவர்கள் அறிந்து கொண்டு, நேர்மையைக் கடைப்பிடித்து, வாய்மையில் தவறாமல் விருத்தியடைந்து வந்தனர். பொய்ம்மொழி புகன்று, அற்ப குணத்தைக் கைக்கொண்டு வியாபாரத் தைச் செய்தவர்களோ, நீதிபதியால் தண்டிக்கப்பட்ட வர்களாய் அவமானத்தை அடைந்தும் வந்தனர்.

அந் நகரில் மீன்பிடித்து ஜீவனம் செய்யும் ஒரு மனிதன் இருந்தான். அவனுக்கு ஒரே ஒரு புதல்வன் இருந்தான். பீடிரோ என்பது அவனது பெயர். அவன்

தனது தந்தையின் வழியை 'மகனுரைக்கும் தந்தை நலத்தை' என்கிறபடி பின்பற்றினான். அவனது தகப்பன் சோம்பேறியா யிருந்தமையால், மெய்வருந்த ஒரு தொழிலுஞ் செய்யாமல், தந்திரமாகப் பொருள்தேடிக் காலங் கழித்துவந்தான். அவனது மகனான பீடிரோ, இளமையிலேயே திருட்டுத் தொழிலில் இறங்கினான். அருகிலிருந்த திராக்ஷத் தோட்டங்களில் பிரவேசித்துப் பழக்குலைகளைத் திருடி வந்தான். ஒருநாள் தோட்டக்காரன் ஒருவன் பீடிரோவின் திருட்டுத் தனத்தைக் குறித்து அவனது தந்தையினிடம் முறையிட்டான். அவன், தனது பிள்ளை சிறுவனாயிருப்பதால் திருடினான் என்றும், பெரியவனாய்விடின் அங்ஙனம் செய்யான் என்றும் சமாதானங்கூறித் தோட்டக்காரனை அனுப்பினான். பிறகு, தன்னுடைய புத்திரனைச் சமர்த்தனாக்கவெண்ணி அவனுக்குச் சில தந்திரோபாயங்களை யெல்லாம் கற்பித்து வந்தான். மேலும் நயவஞ்சகமாகப் பேசுவதற்கும், சரக்குகளின் விலையையும் மதிப்பையும் அதிகமாய்ச் சொல்வதற்கும், வாங்குகிறவர்கள் அறிவீனர்களா யிருந்தால், அவர்களின் அறிவீனத்தையே ஆதாரமாகக் கொண்டு, பல விதங்களால் அதிக லாபம் சம்பாதிப்பதற்கும், தகுந்த வழிகளை மகனுக்குப் போதித்து வந்தான்.

ஒருநாள் பீடிரோவை அவனது தந்தை அழைத்து, முந்தின தினத்தில் பிடிக்கப்பட்டதும் விலையாகாததுமான மீன் ஒன்றைக் கடைக்குக் கொண்டு போய், இலாபம் வரும் வழியில் விற்றுவிட்டு வரும்படி கூறி அனுப்பினான். அவனும் தகப்பன் சொல்லிய படியே மீனை யெடுத்துக்கொண்டு போய்த் தெருவில்,

"மீன், மீன், இப்பொழுது தான் பிடித்த மீன்" என்று கூவினான். அத்தெரு வழியாக வந்த ஒரு ஆங்கிலேய வேலைக்காரப் பையனைப் பார்த்து, அவனருகிற்சென்று, "இது புதிய மீன், நல்லமீன்" என்று மொழிந்தான். அவன், "இது இன்று பிடித்த மீன்தானா?" என்று கேட்டான். இவன் "ஆம், இன்று காலையில் ஒரு மணி நேரத்திற்கு முன்புதான் பிடிக்கப்பட்டது" என்று தைரியமாகப் பொய்யுரை புகன்றான்.

"பொய்யுடை ஒருவன் சொல்வன்மையினால்
மெய்போலும்மே மெய்போலும்மே"

என்பதற்கேற்ப, அந்நிய நாட்டினனாகிய பணியாள், பீடிரோவின் சொல்லை உண்மையென்று நம்பி பாஷை நன்றாய்த் தெரியாததனால் அதிகமான விலையைக்கொடுத்து மீனை வாங்கிக்கொண்டு வீட்டிற்குச் சென்றான். பீடிரோ அவனை ஏமாற்றியதைக் குறித்து அகமகிழ்ந்து தனது நேசர்களிடம் தன் சாமர்த்தியத்தைப் புகழ்ந்து பேசிவிட்டுத் தன்னில்லத்தை யடைந்தான்.

மற்றோர்நாள், பீடிரோ உண்மையாகவே புதிதாகப் பிடிக்கப்பட்ட மீன்களைத் தெருவில் கொண்டுபோய் வழக்கம்போல் கூவி விற்கத் தொடங்கினான். அப்பொழுது அங்கு, முன்னர் இவனால் ஏமாற்றப்பட்ட சிறுவனும் மற்றுஞ் சில பணியாட்களும் நின்றுகொண்டிருந்தார்கள். ஆங்கிலேயச் சிறுவன் இவனைச் சுட்டிக்காட்டி, "அவன் திருடன்; அயோக்கியன்; கபடன்; வஞ்சகன்" என்று கூறினான். இதைச் செவியுற்று அங்கிருந்தவர்கள் அவனது பண்டத்தை வாங்க மறுத்தனர். பின்பு அவன் பகல் முழுவதும் தெருத் தெருவாய்க் கூவி அலைந்தும் ஒன்றுமே விலையாகவில்லை.

அன்றுமுதல் அவனிடம் ஒருவரும் சரக்கு வாங்க வரவில்லை. ஒரு நற்குணமுள்ள சிறுவனை ஏமாற்றிதால் அவனுக்கு அதிக நஷ்டமும் கஷ்டமும் உண்டாயின.

மேலும், அவன் ஏதாவது சொற்பவிலைக்கு விற்று லும், பணத்தைத் தந்தையிடம் கொடுக்காமல், தனக்கு இஷ்டமான பண்டங்களை வாங்கிப் புசிப்பது வழக்கம். "உனக்கும் பே, பே, உங்கள் அப்பனுக்கும் பே, பே" என்பதற்கு ஏற்பத் தன்னிடத்தில் பண்டம் வாங்க வருபவர்களை ஏமாற்றினதுபோல், தனது தகப்பனையும் அவன் ஏமாற்றிவந்தான். அவனது தீய ஒழுக்கத்தால் அவன் தந்தையின் வியாபாரமும் குறைந்துகொண்டே வந்தது. அவன் தன்னையும் ஏமாற்றுவதை அறிந்த அவனது தந்தை வெகுண்டு, அவனை நையப்புடைத்து வீட்டை விட்டு வெளியே துரத்திவிட்டான்.

அப்பொழுது அவனது கதி அதோகதியாகி விட்டது. மனங்கலங்கி வருந்துகையில் ஒரு புதிய எண்ணம் அவன் மனத்திலுதித்தது. உடனே அவன் அந் நகரத்திலேயேயுள்ள நல்லொழுக்கமுடைய ஒருவனுடன் சிநேகங்கொண்டு அவனது உதவியால் ஒரு தொழிலை ஆரம்பிக்கக் கருதினன். யாவராலும் நன்கு மதிக்கப்பட்ட பிரான்சிஸ் என்ற பையனை அணுகித் தன்னையும் ஒரு பங்காளியாகச் சேர்த்துக்கொண்டு கூட்டு வியாபாரம் செய்யும்படி பிரார்த்தித்தான். பிரான்சிஸ் பீடிரோவுக்கு நண்பனாக இருந்து உதவிசெய்ய நினைத்த போதிலும், அவனைப் பங்காளியாக ஏற்றுக்கொள்ள உடன்படவில்லை.

பிரான்சிஸ், தான் வழக்கமாக விற்றுவந்த திராட்சைப் பழக்குலைகளில் சிலவற்றை அவனுக்கு இனமாகக்

கொடுத்து, ஒழுங்காய் வியாபாரஞ் செய்துவரும்படி புத்தி புகட்டி அனுப்பினான். அவனது உதவியால் பீடிரோ சிலகாலம் வாய்மை, தூய்மை, முதலிய நற்குணமுடையவனாய்த் தொழில் நடத்திவந்தான். என்றாலும், ' ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு ' என்றபடி மிக விரைவில் பொருளீட்டிச் செல்வனாக வேண்டுமென்கிற ஆசையினால் தூண்டப்பட்டவனாய், எளிதில் பொருள் சம்பாதிப்பதற்குரிய வழியைத் தேட ஆரம்பித்தான்.

சிறுவர்களுக்குச் சர்க்கரை உருண்டையின்மீது அதிக விருப்பம் உண்டு என்பது யாவரும் அறிந்ததே. பீடிரோ, தன் சிநேகிதனுடைய உதவியால் சம்பாதித்த பொருளைக்கொண்டு, சர்க்கரை உருண்டைகள் வாங்கி வியாபாரஞ் செய்ய எத்தனித்தான். ஒரு சிறிய கடையை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு, வெளிப் பக்கத்தில் ஒரு விளம்பரப் பலகையில் " இவ்விடத்தில் உருசிகரமானவையும், பெரியவையும், பல வர்ணங்கள் தீட்டியவையுமான சர்க்கரை உருண்டைகள் சரசமாக விற்கப்படும் " என்றும், " சர்க்கரை உருண்டை வாங்குபவர்களுக்கு, வாதுமைப்பருப்பு ஒன்று இனாமாகக் கொடுக்கப்படும் " என்றும் பொறித்து, அதைத் தொங்கவிட்டிருந்தான். அந்த விளம்பரத்தை வாசித்தவர்களும் கேட்டவர்களும் ஆனந்த மடைந்தார்கள்.

தினந்தோறும், அநேக சிறுவர்கள் பீடிரோவினது கடைக்கு வந்து சர்க்கரை உருண்டைகள் வாங்கத் தொடங்கினர். அவனுக்கு வியாபாரம் மும்முரமாக நடந்து வந்தது. எல்லோரும் அவனிடம் மிகுந்த நம்பிக்கை கொண்டார்கள். அவன் சர்க்கரை உருண்

டைகளை ஒரு சிறிய தகர டப்பியால் அளந்து கொடுப்பது வழக்கம். அளக்கும்போது உருண்டைகள் குவிந்து நிற்கும்வரை அழுத்திப், பின்பு சிறுவர்களின் கையில் கொட்டுவான். நாளடைவில் அவனுக்குத் அதிர்ஷ்டத்தினால் வியாபாரம் தழைத்து ஓங்கலாயிற்று. 'பழைய குருடி கதவைத் திறடி' என்றபடி அவன் கபடத் தொழிலை மீண்டும் கைக்கொள்ள ஆரம்பித்தான். இலவசமாகக் கொடுத்துவந்த வாதுமைப் பருப்பை நிறுத்திவிட்டான். ஏன் வாதுமைப் பருப்பைக் கொடுக்கவில்லை என்று கேட்பவர்களுக் கெல்லாம் "இப்பொழுது அது கைவசத்தில் இல்லை; செலவழிந்து விட்டது" என்று பதில் கூறி வந்தான்.

ஒருநாள், தச்சுவேலை செய்யும் வாலிபன் ஒருவன் அவ்வழியாய் வரும்பொழுது, பீடிரோவின் விளம்பரப் பலகையை வாசித்துப் பார்த்துத், தனக்கும் தனது தங்கைக்கும் சர்க்கரை உருண்டைகள் வாங்க விரும்பினவனாய், அவனது கடைக்குச் சென்று தனக்கு ஒரு டப்பியும், தனது தங்கைக்கு ஒரு டப்பியும் அளந்துபோடச் சொல்லி, இலவசமாகக் கொடுக்கிறதாக எழுதியுள்ளபடி வாதுமைப் பருப்பைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டான். அதற்குப் பீடிரோ "இப்பொழுது என்னிடம் வாதுமைப் பருப்பு இல்லை" என்று உரைத்தான். "அப்படியானால் விளம்பரப் பலகையில் எழுதியுள்ளதை யழித்துவிடவேண்டும்" எனக் கூறி, அத் தச்சு வேலைகாரனான கார்லோ என்னும் வாலிபன், ஒரு சீமைச் சுண்ணாம்புக் கட்டியை எடுத்து அந்த வார்த்தைகளின்மேல்கீறி அவற்றைக் கலைத்துவிட்டான். இதனைக்கண்ட பீடிரோவுக்குக் கோபம் உண்

டாயிற்று. அவன் முதலில் கார்லோவினிடம் சாந்த மாய்ப் பேசியபோதிலும் பிறகு வெஞ்சினத்தால் மதி யிழந்தவனாகி அவனைக் கடிந்து பேசி "யாவரும் எனது யோக்கியதையை நன்றாய் அறிவார்கள்; ஆகையால் இனி நீ என்னை ஒன்றும் செய்யமுடியாது" என்று சொன்னான்.

கார்லோ, "நான் உனது வியாபாரத்தைக் கெடுக்க நினைக்கவில்லை. உண்மை பேசினால் லாபம் உண்டு. பொய் ஒருவனுக்குக் கேட்டை விளைக்கும் என்பதை உனக்கு அறிவிக்கவே அதை அழித்தேன்" என்றான். பிறகு அவனை நோக்கி, "நீ எக்கேடாயினும் கெட்டுப்போ. அதனால் எனக்கு யாதொரு பாதகமும் இல்லை. நான் கொடுத்த காசுக்குச் சர்க்கரை உருண்டை களைக் கொடு. நான் செல்லுகிறேன்" என்று கார்லோ சொன்னான். உடனே பீடிரோ, "உனது கையை யேந்தி னால் அளந்து கொட்டுகிறேன்" என்றான். கார்லோ "எனது கையில் கொட்ட வேண்டியதில்லை. இந்தப் பாத்திரத்தில் போடுவாயாக" என்று சொல்லி ஒரு பாத்திரத்தை அவனுக்கு எதிரில் நீட்டி "இதே பாத் திரத்தில் நேற்று எனது சகோதரிக்கு வாங்கிக் கொடுத்தேன். ஆகையால், இன்றைக்கும் இதில் வாங்கிக் கொண்டுபோனால் அவளுக்குச் சந்தோஷமாக இருக்கும்" என்றான். அவன் சொன்னபடியே பீடிரோ அதில் கொட்டினான். பாத்திரத்தில் போட்டதும் அளவு குறைவாயிருக்கிறது என்றறிந்த கார்லோ, பீடிரோவைப் பார்த்து, "நேற்று வேறொரு கடையில் வாங்கினது இதில் நிறைந்திருந்தது. இன்று நீ கொடுத் ததோ குறைவாயிருக்கிறது," என்று சொல்ல எண்ணி,

சந்தேகங்கொண்டு அவனது அளவு டப்பியை உற்றுக் கவனித்துப் பார்க்கையில், அதனுள்ளே ஒரு தட்டு போடப்பட்டிருந்ததைக் கண்டான்.

பின்பு, கார்லோ இவனது மோசத்தைப் பலரும் அறியும்படி கடைத்தெருவில் எடுத்துக் கூறினன். பீடிரோவினுல் முன்பு ஏமாற்றப்பட்ட அநேக சிறுவர்கள் அவனது கடையிற் புகுந்து, தட்டுமுட்டுச் சாமான்களை உடைத்ததும் அல்லாமல், அவனது விளம்பரப் பலகையையும் சின்னபின்ன மாக்கினூர்கள். அவனது மோசத்தை உணர்ந்ததும் ஜனங்கள் கோபங்கொண்டு திரளாக அவனது கடைக்கு நேரே வருவதைக் கண்டு பயந்து அவன் தன்னுயிர் தப்பும்பொருட்டு அவ்விடம் விட்டு ஓடிவிட்டான்.

பீடிரோ முன்போலவே பிழைப்புக்கு வழியற்றவனுய் நாடோடியாய் அலைந்தான். ஒருநாள், சிறிய பெண் ஒருத்தி விறகுச் சுள்ளிகளைப் பொருக்கிக கூடையில் வைத்துவிட்டு, ஒரு சிநேகிதையினிடம் பேசிக்கொண்டிருக்கையில், கூடை மாயமாய் மறைந்துவிட்டது. அச் சிறுமி அழுதுகொண்டே வீட்டிற்குப் போய் அங்கு நடந்த விவரத்தைத் தனது தமையனிடங் கூறினுள். உடனே அவள் தமயன் திருடனைக் கண்டுபிடிப்பதற்காகக் கடைதெருவிற்குச் சென்றுன். அங்குள்ள ஒரு ரொட்டிக்கடையில் தனது சகோதரியின் கூடை, விறகுக் கட்டோடு இருப்பதைப் பார்த்து, அங்கு விசாரித்ததில் அது பீடிரோவினுல் விற்கப்பட்டது என்று அறிந்து, அவனைத் தேடிக் கண்டுபிடித்தான். சிறுவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டங்கூடி, இனி அப் பக்கங்களில்

பீடிரோ விறகு கொண்டுவந்து விற்கக்கூடாது என்று தீர்மானித்ததோடு, அவனை அந் நகரத்திலிருந்து வெளியே துரத்தியும் விட்டனர். இங்ஙனம் இவன் மூன்றுதடவை தனது கெட்ட நடவடிக்கையால் ஜீவனத்துக்குரிய தொழிலை இழந்தான்.

பின்னர் பீடிரோ, பலவிடங்களில் அலைந்து திரிந்து நேப்பில்ஸ் நகரத்திற்கு அருகில் உள்ள பட்டண மொன்றில் கூலிவேலைக்கு அமர்ந்தான். அங்கு ஒரு குடியானவனுடைய தோட்டத்திற்கு எரு எடுத்துக்கொண்டுபோய் அதனால் கிடைக்கும் கூலியைக் கொண்டு வயிறு வளர்த்து வந்தான்.

ஒருநாளிரவில் பீடிரோ வண்டியில் எரு வாரிக் கொட்டிக் கொண்டிருக்கையில், அவ்வழியே சென்ற ஒரு வண்டியிற் பூட்டி இருந்த குதிரை, வாணவேடிக் கைகளின் சத்தத்தினால் மருண்டு ஓடி வண்டியைக் கீழே தள்ளிவிட்டது. அவ்வண்டியின் உள்ளே இருந்த சீமாட்டி உருண்டு தரையில் விழுந்தாள். அவள் அணிந்திருந்த நவரத்தினங்கள் இழைத்த மோகரா மாலை தவறிக் கீழே விழுந்து விட்டது. அங்கு உண்டான கலவரத்தில் அதை ஒருவரும் கவனிக்கவில்லை. அம் மாலையைக் கண்ட பீடிரோ, மெதுவாய்ச் சென்று அதைத் திருடி எடுத்துக்கொண்டு திருட்டுச் சொத்துக்களை வாங்கி விற்கும் ஒரு யூதனுடைய கடையில் விற்கச் சென்றான்.

தற்செயலாய்ப் பீடிரோவினது தந்தை அவ்விடத்தில் வந்து, தன் மகன் கையில் வைத்திருந்த மோகரா மாலையைப் பிடுங்கிக்கொண்டான். 'தகப்பன் அரைத் திருடன், தனயன் முக்கால் திருடன்' என்றபடி பீடி

ரோவின் தந்தை, அந்த மாலையைத் தனது குமாரன் அபகரித்துள்ளான் என்றறிந்து, அதன் சொந்தக் காரியினிடம் உண்மையைத் தெரிவித்து விடுவதாகச் சொல்லிப் பயமுறுத்தினன். பிறகு அவன் அம்மாலையை விற்று, விற்ற தொகையில் பாதியைப் பீடிரோவுக்குக் கொடுத்துவிடுவதாக வாக்குத்தத்தம் செய்துவிட்டு ஒரு கடையை நோக்கிச் சென்றான். 'தான் திருடி அயலாரை நம்பாள்' என்கிறபடி, பீடிரோ தன் தகப்பனரது அயோக்கியத்தனத்தை அறிந்தவனதால், அவன் தனது தந்தை என்ன விலைக்கு விற்கப்போகிறான் என்பதை அறிந்துகொள்ளும் பொருட்டு, அவனுடன் கடைக்குச் சென்றான். அங்கு விலைபேசி முடிந்தவுடன் தனக்குச் சேரவேண்டிய பாதித் தொகையைத் தந்தையிடமிருந்து பெற்றுக்கொண்டு வெளியே சென்றனன்.

பின்னர் அவன், அயலகத்தாரிடம் தனக்குப் புதையல் அகப்பட்டதெனக் கூறித் தன் கையிலுள்ள பணத்தைக்கொண்டு ஒரு நல்ல வீட்டை வாங்கி, அதில் தனவானைப் போன்று இடம்பமாக வாழ்ந்து வந்தான். 'அநியாயமாய்ச் சம்பாதித்த செல்வம் சிறகு முளைத்துப் பிறகு பறந்துபோய் விடும்' என்னும் மூதுரை பொய் யாகாதபடி, இந்தப் பீடிரோவினது செல்வமும் வெகு விரைவில் குறைந்து போய்விட்டது. பின்னும் அவன் தகாத தோழர்களோடு சேர்ந்து, தவறான வழியில் வாழ்ந்து, தனது பொருள் முழுவதையும் இழந்ததோடு மிகுந்த வறுமையை யடைந்து, பிழைப்புக்கும் வழியற்றவனுனன்.

அவனது சிநேகிதர்களோ பலவகையான ஈனத் தொழில் செய்வதிலேயே ஊக்கமுடையவர்கள்; கொலை

முதலிய பாதகத்திற்கு அஞ்சாத கொடிய இதயம் உள்ளவர்கள்; பகற் கொள்ளைக்காரர்கள். பீடிரோ இப்படிப்பட்டவர்களோடு சேர்ந்து தன் பொருள்களை எல்லாம் வீணுகச் செலவழித்தது மல்லாமல், "பழக்கம் கொடியதுபார் பாறையினைக் கோழி, கிழிக்கும்" என்றபடி அவர்களுடன் கூடித் திருடவும் ஆரம்பித்தான்.

ஒருநாள், திருடர்கள் கூட்டங்கூடி அயல் நாட்டிற்குச் சென்றுள்ள ஒரு பிரபுவின் வீட்டில், நடுநிசியில் கொள்ளையிடத் தீர்மானித்தார்கள். அந்தப் பெரிய பிரபுவின் வீட்டில், அநேக வேலைக்காரர்கள் இருந்தபடியால் அவர்களைத் தங்களுக்கு உடந்தையாக இருக்கும்படி நயத்தாலும் பயத்தாலும் வேண்டிக்கொண்டார்கள். 'பணம் என்றால் பிணமும் வாயைத் திறக்கும்' என்பதற்கு ஏற்ப, அந்த மாளிகையில் உள்ள பணியாளர்களிற் பலர் பணத்திற்கு ஆசைப்பட்டு எஜமானனுக்கே துரோகஞ் செய்யத் தலைப்பட்டனர். கள்வர் தலைவன், தனது தோழர்களோடு பீடிரோவையும் அழைத்துக்கொண்டு, நள்ளிரவில் அப் பிரபுவின் மாளிகையில் பிரவேசித்துப், பணம் நகை முதலியவைகள் வைத்திருந்த அறையில் கன்னம் வைத்து அளவிறந்த பொருள்களை அபகரித்தான். எஜமானனுக்குத் தீங்கு நினையாத உண்மையுள்ள சில வேலைக்காரர்கள் திடீரென விழித்து எழுந்து, "திருடர், திருடர்" என்று பெருங் கூச்சலிட்டனர். இக் கூச்சலைக் கேட்ட இரு பக்கங்களிலும் வசிக்கும் அயலார்கள் ஓடிவந்து, அப்பிரபுவினது மாளிகையைச் சூழ்ந்து கொண்டார்கள். திருடர்கள் திருடுவதில் நன்றாய்த் தேர்ச்சி யடைந்தவர்கள். ஆகையால் பீடிரோவைத் தவிர மற்றையோர் தப்பியோடி விட்டனர்.

பீடிரோ வேலைக்காரர்களிடம் அகப்பட்டுக்கொண்டான்.

அவனை சிறைச்சாலையில் அடைத்து வைத்தனர். பிறகு அவனுக்குக் கடினகாவல் விதிக்கப்பட்டது. அவன் தனது வாழ்நாள் முழுவதையும் சிறைச்சாலையிலேயே கழிக்க நேர்ந்தது. இளமையில் ஆரம்பித்த திருட்டுப் புத்தி, இங்ஙனம் அவனை ஆயுள் முழுவதும் ஆறாத்துயரம் அடையும்படி செய்துவிட்டது.

ஒருவன், தனது இளமைப்பருவத்தில் நல்லோரது சார்பால், ஒழுக்கத்தில் பயிற்றப்பெற்றால் முதுமையிலும் நன்மையையே அடைவான். அவ்வாறே தீயவரது சேர்க்கையால் தீயவழிகளில் ஒழுகின் முதுமையிலும் தீவினையின் பயனையே அடைவான் என்பதில் ஐயமில்லை.

> 'பரியும், கருங்களிறும், பைங்கிளியும், சேவும்,
> புரியும் பயில்வளவே போற்றும்; —தெரியிழையார்
> பாலர் தமைப்பயிற்றும் பண்பினரை ஒத்தொழுகற்
> பாலரே யாவர் பரிந்து.' —நீதிமஞ்சரி

## 12. இராஜ பக்தி

பரதகண்டமாகிய இந்தியாவில் செழித்தோங்கிய விஜயநகர இராஜ்யம் 1564-ம் வருடத்தில் முகம்மதிய சுல்தான்களால் அழிக்கப்பட்டது. அந்த இராஜ்யத்திலுள்ள ஜனங்கள் 200 மைல்களுக்கு அப்பால் உள்ள சந்திரகிரி என்ற இடத்தைத் தலைநகரமாகச் செய்துகொண்டு, பழைய இராஜ்யத்தின் ஒரு பகுதியை ஆண்டு வந்தார்கள். 1614-ஆம் வருடத்தில் வேங்கடராயர் என்பவர் அரசராயிருந்தார். அவருக்குச் சந்ததி

யில்லாததால், மிகுந்த சிறப்புள்ள தமது குலம் தம்மோடு முடிவடைந்து போகுமேயென்ற கவலை உண்டாயிற்று. அவரது இல்லக் கிழத்திக்கும் வருத்தம்மேலிட்டிருந்ததால், அவன் அயல் மகன் ஒருவனை எடுத்து அபிமான புத்திரனாக வளர்த்துவந்தார். அரசருக்கு அவ்வபிமான புத்திரனைத் தம் சொந்த புத்திரனைப் போல் பாவித்து வர இஷ்டமில்லையானாலும், தம் மனைவியைச் சந்தோஷிப்பிக்க விரும்பி, அந்தப் பையனை அரண்மனையிலேயே வளர்ந்துவர அனுமதித்து, இளவரசன் என்ற பட்டப் பெயரும் கொடுத்தார்.

அவ்வரசர், இறக்குந் தறுவாயில் தம்முடைய சகோதரன் மகனாகிய அரங்கராயன் என்பவனிடத்தில் தமது இராஜாங்க முத்திரையையும் மோதிரத்தையும் கொடுத்து விட்டுத், தன்னைச் சூழ்ந்துள்ள மந்திரி பிரதானி முதலியவரை நோக்கி, "இவனை அரசனாக அங்கீகரித்து இவனுக்குக் கீழ்ப்படிந்து நீங்கள் நடக்கவேண்டும்" என்றும் ஆஞ்ஞாபித்தார்.

அந்த அரசரைக் சூழ்ந்து நின்றவர்களில் ஒருவனும், அரசியின் சகோதரனுமான ஜெகராயன் என்பவனுக்கு அவ்வரசரது ஆஞ்ஞைப்படி நடக்க இஷ்டமில்லை. ஏனென்றால், அரசி, அவனுடைய மகளை இரகசியமாய்த் தான் வளர்த்து வருகிற மகனே பட்டத்திற்கு வருவான் என்ற நம்பிக்கையினால், அவனுக்கு மணமுடித்திருந்தாள். 'கைக்கெட்டியது வாய்க்கு எட்டவில்லை' யாதலால் அரங்கராயனை அரசனாக ஏற்றுக்கொள்ள அரசி உடன்படவில்லை. அரசிக்கு வேறு சில பிரபுக்களும் அனுகூலமாக இருப்பதாக உறுதி கூறினர்.

வயது முதிர்ந்த வேங்கடராயர் மரித்ததும், அவர் சொற்படியே அரங்கராயன் அரியணையில் அமர்ந் தான். மூன்று பிரபுக்களைத் தவிர மற்றெல்லோரும் அவனை அரசனாக ஏற்றுக்கொண்டு அவன் ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாக வாக்குறுதி செய்தார்கள். அவர்களில் சிலர் அயோக்கியரா யிருந்ததனால் உத்தி யோகத்திலிருந்து நீக்கப்பட்டனர். அவ்வாறு விலக் கப்பட்டவர்கள் உடனே ஜெகராயனுடைய கட்சியில் சேர்ந்து அம்மன்னனுக்கு விரோதமாகச் சதியாலோ சனை செய்து வந்தார்கள். புதிய பார்த்திபன் இராஜ்ய சம்பந்தமான விஷயங்களில் தனது கருத்து முழு வதையும் செலுத்தி வந்ததால், தனக்கு விரோதமாகச் சிலர் செய்யும் சூழ்ச்சிகளைச் சற்றேனும் அறிய முடி யாமற்போயிற்று.

ஜெகராயனும் அவனது கட்சியைச் சார்ந்த சில பிரபுக்களும் அரங்கராயனை அரசனாகத் தாமும் அங்கி கரிப்பதாகவும், நேரில் வந்து பணிய விரும்புவதாகவும் தூது அனுப்பினார்கள். இதை உண்மை யென்று நம் பின அரங்கராயன், அவர்களைக் கோட்டைக்குள் வரும் படி உத்தரவு செய்து, வாயிற்காப்போர் அவர்களைத் தடையின்றி உள்ளே அனுப்பவேண்டும் என்றும், பிர புக்களுக்குரிய சகல மரியாதைகளுடன் வரவேற்க வேண்டுமென்றுங் கட்டளையிட்டான். ஜெகராயனும் அவனுடைய சிநேகிதர்களும் அரச மாளிகையில் தடையின்றிப் பிரவேசித்தார்கள். அவர்களுடைய கள்ளக் கருத்தை அறிந்து கொள்ளாமையால் மெய்க் காவலர் அஜாக்கிரதையாக இருந்துவிட்டனர். இதை அறிந்த கபடத் துரோகிகள், அரங்கராயனைப் பிடித்து

"நீ அரச பதவியைத் துறந்துவிட வேண்டும். மீண்டும் அதைப்பெற முயற்சி செய்தல் கூடாது. அங்ஙனம் முயலுவையேல் உன்னைக் கொன்றுவிடுவோம்" என்று பயமுறுத்தினார்கள். அரங்கராயன் செய்வது இன்னதென்றறியானாய் அவ்விரோதிகளின் நிபந்தனைக்கு உட்பட்டு, மனைவி மக்களுடன் அரண்மனையை விட்டு நீங்கி, அழுத கண்ணும் சிந்திய மூக்குமாகப் புறப்பட்டுச் சென்றான். அந் நகரில் இவனைத் தொழுபவருமில்லை, விசாரிப்பவருமில்லை. இவனுக்காகப் போர் புரிந்து விரோதிகளை யொழிக்க ஒருவரும் முயலவில்லை.

அரங்கராயனிடத்தில் மிகுந்த அன்பு கொண்ட எச்சம நாயக் (Echama Naik) என்னும் வீரனை பிரபு, அந்தச் சமயத்தில் தலைநகருக்கு வெகு தூரத்திலுள்ள கோட்டையில் தன் படையுடன் இறங்கி இருந்தான். அவனுக்கு அரண்மனையில் நடந்த சம்பவம் தெரியாது. ஜெகராயனது அக்கிரமச் செயலைச் செவியுற்றதும், அவன் கோட்டையைப் பலப்படுத்தித் தன்னுடைய உண்மையான அரசனைக் காப்பாற்றும் பொருட்டு யுத்தம் செய்வதெனத் தீர்மானித்தான்.

'காற்றுள்ள போதே தூற்றிக்கொள்' என்பதற்கேற்ப, ஜெகராயன் அரசனையும் அவனது மனைவி மக்களையும் சிறையிலிட்டுவிட்டுத் தனது மருமகனைச் சிம்மாதனத்தில் சிறப்புற ஏற்றுவித்துத் தானே ராஜ்ய காரியங்களைக் கவனித்து வந்தான்; "பிரபுக்கள் யாவரும் உடனே இந்த மன்னனை வந்து வணங்கி விட்டுச்செல்ல வேண்டும்" என உத்தரவு பிறப்பித்தான். ஜெகராயனுக்குப் பயந்திருந்த அநேக பிரபுக்கள் அவ்வாறே வந்து

வணக்கங் காட்டிச் சென்றனர். ஆனால் இராஜ விசுவாசமுள்ள எச்சம நாயக் மாத்திரம் "அரங்க ராயரே எமது அரசர். அவரைத் தவிர வேறெவர்க்கும் வணக்கஞ் செலுத்தமாட்டேன். நியாயமான அரசனுக்காகப் போர் நிகழ்த்தவும் சித்தமாக இருக்கிறேன்" என்று பதில் அனுப்பினன்.

அவ்வுரையைக்கேட்ட ஜெகராயன், எச்சம நாயக் உடனேவந்து தன்னைப் பணியாவிட்டால் திரண்ட சேனையுடன் புறப்பட்டு வந்து அவனைக் கொசுவை நசுக்குவதைப்போல் நசுக்கி விடுவதாகத் தெரிவிக்கும் பொருட்டு ஒரு தூதனை அவனிடத்தில் அனுப்பினன். வீரனாகிய நாயக் "பனங்காட்டு நரி சலசலப்புக் கஞ்சாது" என்பதுபோல இந்த வீண் வெருட்டலுக்கெல்லாம் பயப்படாதவனாய், அவனது சேனையுடன் எதிர்த்துப் போர் செய்ய ஆயத்தமாக இருப்பதாய்ப் பதில் கூறியனுப்பினன்.

இது இவ்வாறு இருக்க, ஜெகராயனைப் பின்பற்றினவர்களில் பலர் கருத்து மாறுபட்டுச் சண்டையிட்டுக் கலகஞ் செய்தார்கள். அவர்களைச் சமாதானம் செய்து கொண்டு தன் சார்பாகவே நிலைத்திருக்கும்படி செய்ய வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் ஜெகராயன் கண்ணுங் கருத்துமாக இருந்து விட்டான்.

பின்பு, நாயக்கனை சாம தான பேத தண்டோபாயங்களால் வசப்படுத்த வேண்டுமென்று நினைத்த ஜெகராயன், நாயக் தன்பக்கம் சேர்ந்தால் உயர்ந்த உத்தியோகத்தையும், திரண்ட செல்வத்தையும், நிலங்களையும் கொடுப்பதாக வாக்குறுதி செய்த விஷயத்தைத் தெரிவிக்கும் இன்சொற்கள் நிரம்பிய கடிதம் ஒன்றை

ஒரு தூதன மூலமாக அனுபபினன். ஜெகராயனுடைய தந்திரம் நாயக்கினிடத்தில் பலிக்கவில்லை.

நாயக் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டு, அங்குத் தன் குடும்பத்துடன் கஷ்டப்படுகிற அரங்கராயரை வெளிப்படுத்துவதற்கு உரிய பல முயற்சிகள் செய்தும் பயன் படவில்லை. பின்பு நாயக், ராயரைச் சிறை மீட்க முடியாமற் போயினும் அவரது இளைய புத்திரனையாவது சிறையினின்று தந்திரமாய் வெளிவரச் செய்து, அவனை அரசனுக்க முயலலாம் என்று தீர்மானித்து, அதற்குத் தக்கபடி காரியத்தை நிறைவேற்ற ஓர் சூழ்ச்சி செய்தான்.

ஒருநாள் நாயக், காவலில் வைக்கப்பட்டுள்ள அரசனுடைய உடைகளை வெளுக்கும் வண்ணானை வரவழைத்து. அவனை அரசனது இரண்டாவது புத்திரனைத் தந்திரமாய்ச் சிறையினின்று வெளிப்படுத்தித் தர உதவிபுரியவேண்டும் எனக் கேட்டுக்கொண்டான். வண்ணானும் தனக்கு இலாபம் கிடைக்கும் என்று நினைத்து நாயக்கினுடைய வேண்டுகோளுக்கு இசைந்தான். நாயக், ரங்கராயருடைய இரண்டாவது குமாரனை வண்ணான் மூலமாகத் தன்னிடம் வருவிக்க எண்ணியிருப்பதாக அவருக்குக் கடிதம் ஒன்றை எழுதி, அதை வண்ணான் மூலமாகவே அனுப்பினன். இந்த நிருபத்தை வண்ணான் ராயருடைய உடையில் மறைத்துவைத்து, ஒருவரும் அறியாதபடி ராயரிடம் சேர்ப்பித்தான். கடிதத்தைப் படித்துப் பார்த்து நாயக்கினுடைய வேண்டுகோளின்படியே தனது இளைய குமாரனை ராயருடைய வண்ணான் மூலமாக அனுப்பினர். வண்ணானும் அழுக்குத் துணிகளைக் கொண்டு

செல்லும் கூடையில் பையனை உட்காரச் செய்து அச் சிறுவனைத் துணிகளால் மூடி ஒருவரும் சந்தேகிக்காத படி காவலாளரைக் கடந்து வெளியில் வந்து சேர்ந் தான்.

மூன்று நாட்கள் வரையில் அரசகுமாரனை ஒளித்து வைத்திருந்து ஒருநாள் இரவில் நாயக்கினுடைய கோட் டையை அடைந்து, அவனிடம் குழந்தையைக் கொடுத் தான். இவ் விஷயம் மிகவும் இரகசியமாய் நடந்ததாகை யால், ஜெகராயனுக்கு முதலில் தெரியாதிருந்தது. பின்பு சிலநாள் கழிந்து இவ் விஷயம் அவனது



செவிக்கு எட்ட, அவன் தணியாக் கோபமூண்டு அரங்க ராயரது சிறைக்கூடக் காவற்காரர்களை இருமடங்கு

அதிகமாக்கி, ராயருக்குக் கொடுக்கப்பட்டு வந்த உண வையுங் குறைத்துவிட்டான்.

நாயக்கினுடைய பெருமுயற்சியைக் கேள்வியுற்ற பல பிரபுக்கள், ஜெகராயனையும் அவனது மருமகனையும் வெறுத்து உண்மையான ராஜ வம்சத்திலுள்ளவர் களுக்கு உதவி செய்யத் தீர்மானித்து, நாயக்கினுக்குத் தங்களது அபிப்பிராயத்தையும் தெரிவித்தார்கள். அவர் களது தீர்மானத்தைக் கண்டு வியந்து ஆனந்தமடைந்த நாயக், அரங்கராயரை எவ்விதமேனும் சிறைமீட்க வேண்டுமென்று நினைத்து, அதற்கேற்ற உபாயந்தேட லாயினன். பின்பு அவன், நம்பிக்கையுள்ள சிலரைத் தேர்ந்தெடுத்து அவர்களை அரசனது கோட்டையில் ஏதாவது ஒரு குற்றேவல் செய்யும்படியான வழியைத் தேடிக்கொள்ளச் சொல்லி, அவர்கள் வேலையில் அமர்ந்த பின், இரகசியமாய்ச் சிறையிலிருந்து கோட்டைக்கு வெளியே வருவதற்குரிய சுரங்கவழி ஒன்றைத் தோண்டி வைக்கும்படி ஏற்பாடு செய்து அனுப்பினான்.

நாயக்கின் கட்டளையைச் சிறமேற்கொண்டு, சிலர் கோட்டையில் வேலையில் அமர்ந்தார்கள். வேலையில் அமர்ந்த அவர்கள் பகற்பொழுதில் சும்மாவிருந்து, அந்தச் சுரங்கவழியை இரவில் சிறிது சிறிதாகத் தோண்ட ஆரம்பித்துச் சிலநாளில் சிறைக்கூடம் வரை யில் கொண்டு வந்து விட்டார்கள். இவ்வாறு சுரங்கத் தைத் தோண்டிக் கொண்டு வந்து தம்முன் நின்ற அவர் களைப் பார்த்து அரசர் திடுக்கிட்டு அச்சங்கொண்டார். அவர்கள் அரசரது பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து, 'அவர் அங்கு வந்து சேர்பவர்களுடன் சுரங்கத்தின் வழியாக வெளியே வரவேண்டும்' என எழுதியிருந்த

ஒரு கடிதத்தை அவரிடங் கொடுத்தனர். இராஜ விசுவாசம் நிரம்பியுள்ள அந்த நிருபத்தைப் பார்த்தவுடன், ரங்கராயரது கண்களிலிருந்து கண்ணீர் அருவிபோல் பெருகிற்று. அவர் இவ்வளவு துணிவுடன் செய்த காரியத்திற்கு நான் உடன்படாவிட்டால், "உங்களது விசுவாசத்திற்கு அருகன் ஆகமாட்டேன்" என்று கூறிவிட்டு, மனைவி மக்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அரையில் தரித்த ஆடையுடன், அங்கு வந்திருந்த அப் போர்வீரர்களைத் தொடர்ந்து கைகளைக் கீழே வைத்து நகர்ந்து சுரங்கத்தின் வழியாகச் சென்றார். இவ்வாறு அவர்கள் வந்து சுரங்கத்தின் கடைசிப் பாகத்தை அடைந்தபோது, அச் சுரங்கத்தின் மேற் பாகத்தில் காவல் செய்துவந்த சேவகன் நடந்த அதிர்ச்சியினால் அந்தப் பாகம் இடிந்து விழுந்தது. உடனே அக் காவற்காரன் அதைப் பார்த்து வியப்பும் அச்சமுங் கொண்டு கூச்சலிட்டான். திரளான ஜனங்கள் அங்குக் கூடித் தப்பியோட முயன்ற ராயரைப் பிடித்துக் கொண்டார்கள்.

அவரது முயற்சியைப் பார்த்து வெகுண்ட ஜெகராயன் அப்பொழுதே அவரைத் தனியாக ஒரு சிறையில் அடைத்து வைத்தான். இதை அறிந்ததும் நாயக் தன் உயிரைக் கொடுத்தாயினும் தான் மேற்கொண்ட கருமத்தை முடிக்காமற் போகிறதில்லையென்று தீர்மானித்து ஜெகராயரோடு போர்புரிவது என்று நிச்சயித்தான்.

பின்பு ஜெகராயன், தன் தலைநகரை விட்டுத் திரண்ட சேனைகளோடு வெளியே சென்றிருப்பதை அறிந்த நாயக், தன்னிடமிருந்த வீரர்களில் வாலிபனான ஒரு

வனை அழைத்து, நியாயமான அரசனுக்கு உதவி செய்ய இதுவே தக்க சமயம் என்று கூறி, அவனைச் சந்திரகிரியைத் தாக்கும்படி உத்தரவிட்டான். தானே சேனைகளைத் திரட்டிக்கொண்டு போனால் சந்தேகங்கொண்டு ஜெகராயன் தனது பெரும்படையுடன் தன்னை எதிர்க்க வந்துவிடுவானாகில், தனது சிறிய படை அவனது படையால் முறியடிக்கப்படுமே என்று நினைத்து அந்த வாலிப வீரனை அனுப்பினான். நாயக்கின் கட்டளைப்படியே அவ்விளைஞன் ஆயிரம் போர்வீரர்களைச் சேர்த்துக்கொண்டு சந்திரகிரியை அடைந்து, அதைத் தாக்கினான். அங்குக் காவல்புரிய வைக்கப்பட்டிருந்த சேனை சிறியதா யிருந்ததனால், அவன் அச் சேனையைச் சிதறி யோடும்படி செய்தான். அவ்வீரன் தான் அடைந்த வெற்றியை நாயக்கினுக்குத் தெரிவிக்கவும், வேறு துணைப்படை ஒன்று அனுப்பும்படி கேட்டுக் கொள்ளவுங் கருதி ஒரு தூதனை அனுப்பினான். அவ் வாலிபவீரன் சந்தோஷமாய் அங்கே இருக்கையில் திடீரென ஜெகராயன் திரும்பிவந்து எதிர்பாராதிருந்த அவ்வீரனையும் அவனது படையையும் அடியோடு அழித்துவிட்டான்.

ஜெகராயன், அரங்கராயர் உயிருடன் இருக்கும் வரையில் தனக்கு விரோதியாகவே நாயக் இருப்பான் என்று ஊகித்தறிந்து, உடனே அரங்கராயரைக் கொலை செய்து விடும்படி தனது சகோதரனுக்குக் கட்டளையிட்டான். அவன் சகோதரனும் இரக்கஞ் சிறிதும் இல்லாதவனாய், அவனது ஏவலின்படியே அரங்கராயர் அடைக்கப் பட்டிருந்த அறைக்குச் சென்று, ராயரை நோக்கி, “ நீர் இறக்கவேண்டிய காலம் நெருங்கி விட்

டது; வேறொருவர் கையினால் மரணம் அடைய விரும்புகிறீரா? அல்லது உமது கையினாலேயே மாய்த்துக் கொள்ளுகிறீரா?" என்று தயையின்றிக் கேட்டான். அதற்கு ராயர், "நான் உயிர் நீப்பதற்கு முன்னர் எனது மனைவி மக்களைப் பார்க்க அனுமதி தரவேண்டும்" என்று வேண்டினார். அவன், அவரது வேண்டுகோளுக்கு இணங்கி, அவரிருந்த அறைக்கே அவர்களை வரவழைத்தான். ராயர் தனது குடும்பத்தினரை அன்புடன் பார்த்து விட்டுத், தமக்கு உயிர் துறப்பதில் யாதொரு வருத்தமும் இல்லையென்று துணிந்து கூறித் தம்முடைய உடைவாளை உருவித் தமது மனைவியையும் குழந்தைகளையும் குத்திக் கொன்றுவிட்டுக் கடைசியில் தம் உயிரையும் நீத்தார்.

இந்தக் கொடிய துக்ககரமான விஷயத்தைக் கேள்விப்பட்டதும் நாயக் 'குட்டியைப் பறிகொடுத்த புலியைப்போல்' சீறிச் சினமடைந்தான். ஆறாத் துயரத்தில் ஆழ்ந்து வருந்துகிற நாயக், ஒரு தூதுவன் மூலமாக ஜெகராயனுக்கு, "நீ உண்மையான இறைவனையும் அவனது மனைவி மக்களையும் அநீதியாகக் கொன்றுவிட்டபோதிலும் அந்த இராஜ வம்சத்தைச் சார்ந்த செல்வன் ஒருவன் என்னிடம் இருக்கிறான்; என்னையும் அந்த அரசகுமாரனையும் நீ ஒழிக்கும் வரையில் உனது மருமகனுக்குச் சந்தோஷத்தோடு அரசாட்சி செய்ய இடங்கொடுக்க மாட்டேன். ஆகையால் உடனே யுத்தத்திற்குச் சித்தமாயிருக்கக் கடவாய்" என்று தெரியப்படுத்தினான்.

எச்சம நாயக்கினது திடமான தீர்மானத்தைக் கேட்டு அநேக பிரபுக்கள், அவனது இராஜ விசு

வாசத்தை மிகவும் பாராட்டி, அவனுக்கு உதவி செய்யும் பொருட்டு, ஒரு பெரும் படையையுஞ் சேர்த்துக் கொண்டு போர் புரியவும் சித்தமா யிருந்தார்கள்.

ஜெகராயன், தனக்கு அறுபதினாயிரம் காலாட் படைகள் இருந்ததைக் கொண்டு, தன்னை ஒருவராலும் வெல்லமுடியாதென்று செருக்குற்று நாயக்கையும் அவனிடமிருக்கிற அரசகுமாரனையும் வெகு எளிதில் வென்றுவிடலாம் என்று நினைத்து இறுமாந்திருந்தான். நாயக் 'சத்தியம் தலைகாக்கும்' என்பதை உறுதியாக நம்பித், தான் நியாயமான அரசனுக்காகப் போர்புரிவதனுல் கடவுளே தனக்குத் துணைபுரிவார் என்ற நம்பிக்கையுடன் தன்னிடத்திலிருந்த இருபதினாயிரம் காலாட் படையோடு இராஜகுமாரனையும் உடன்கொண்டு ஜெகராயனது சேனையைத் தாக்கினான்.

ஜெகராயனுடைய சேனை புறங்காட்டியோட ஆரம்பித்தது. ஜெகராயனது படை இவ்வாறு சிதறியோடவே நாயக், தனது பாசறையில் தங்கியிருக்கும் ஜெகராயனைச் சிறை செய்வது எளிதாயிற்று. ஜெகராயனைச் சிறையில் அடைத்து வைத்துவிட்டுப் பின்பு இராஜ்யத்தை உடனே உண்மையான அரசகுமாரனுக்கு அளித்து முடிசூட்டி மிகுந்த சிறப்போடு அரசாட்சி செய்யும்படி செய்தான். அரங்கராயரது அருந்தவப் புதல்வன் வெகு ஆடம்பரத்துடன் ஊர்வலம் வந்து பேரிகைகள் முழங்கவும், பிரஜைகள் மங்களகரமாக வாழ்த்தவும் அரியணைமிசை அமர்ந்தனன்.

"நெல்லும் உயிரன்றே ; நீரும் உயிரன்றே ;
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்"

என்றும்,

" திருவுடை மன்னரைக் காணில்
திருமாலைக் கண்டேனே என்னும் "

என்றும் ஆன்றோர் அருளிய அமுதமொழிகளின் பொருளை விளக்கிக் காட்டும் எச்சம நாயக்கினது ராஜ பக்தி, அனைவராலும் போற்றத் தகுந்ததே அன்றோ!

## 11. இக்கரைக்கு அக்கரை பச்சை

சிஸிலி யென்ற தேசத்தில் டைஞேஷியஸ் என்னும் கொடுங்கோல் அரசன் ஒருவன் அரசுபுரிந்து வந்தான். அவன் நாட்டில் வசிக்கும் பிரஜைகள் படுந் துயரம் நாவினுல் சொல்ல முடியாது. குடிகள் ஒவ்வொரு நாளையும் ஒவ்வொரு யுகமாகக் கழித்தார்கள். அக்கொடுங்கோலன், குடிகளைப் பயமுறுத்தித் தனது வல்லமையை அவர்களிடத்தில் காண்பித்தான். ஜனங்கள் அவனது நாட்டில் வாழ்ந்து வருவதைக் காட்டிலும் கடும்புலி வாழும் வனத்தில் வசிப்பதே நல்லது என்று நினைத்தார்கள்; அவனைத் தங்களது பகைவனுகக் கருதினுர்கள்; அவனை யமனுலகிற்கு அனுப்பச் சமயம் பார்த்தவர்களாயு மிருந்தார்கள்.

குடிகள் தன்னை வெறுப்பதை உணர்ந்து அக்கொடிய அரசன் எப்பொழுதும் தன்னை மெய்க்காவலர் சூழ்ந்திருந்து காக்கும்படி ஏற்பாடு செய்திருந்தான். அவன் கொடுங்கோலனு யிருந்தபோதிலும் கவிஞர்கள் தனது சபையில் இருக்க விரும்பினுன். ஆதலால் கவிஞரும், ஞானியரும், பலவித சாஸ்திரங்களில் தேர்ந்த புலவர் பலரும் அவனது அவையில் குழுமி யிருந்தனர். அவர்களும் தமக்கு எப்பொழுது பிராணுபாயம்

உண்டாகுமோ என்று பயந்துகொண்டே நல்ல பாம்புடன் பழகுகிறதைப் போன்று இருந்து வந்தார்கள்.

அவனது சபையில் அவனது தோள் வலிமையையும், அறிவின் திறமையையும் புகழ்ந்துபேசி வெகுமதி பெற்று வாழ்வோராகிய இச்சகர்கள் பலர் இருந்தனர். இவ்வாறு முகமன் கூறுபவர்களில் தேர்ந்தவனை டமோகிலிஸ் என்பவன் அவ்வரசனுக்குத் தோழனாக இருந்தான். அவன் எப்பொழுதும் மன்னர்களைப் போல் உலகத்தில் பாக்கியவான்கள் வேறு எவரும் இல்லை என்றும், வேந்தர்கள் இம்மண்ணுலகில் கடவுளின் பிரதிநிதிகள் என்றும், அவர்களில் விசேஷமாக டைனேஷியஸ் கடவுளின் அவதார புருஷனே என்றும் முகஸ்துதியான வார்த்தைகளையே கூறிவந்தான்.

டமோகிலிஸ், அமைச்சன் செவியிற் படும்படி "ஆ! ஆ! அவனியை ஆளும் அரசாட்சியைப்போல் ஒருவனுக்குப் பேரானந்தத்தைத் தருவது வேறெதுவுமில்லை. உலகமெங்கும் புகழ்பெற்ற வல்லமையும் ஞானமும் நிறைந்த டைனேஷியஸைப் போன்றவர் சுவர்க்க லோகத்திலாவது உண்டோ? சிஸிலித் தேசத்துச் சிங்காதனத்தில் வீற்றிருப்பதைப்போல் ஒருவனுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியது வேறெதுவுமில்லை" என்று கூறித் துதிப்பது வழக்கம். டைனேஷியஸ் வீண் புகழ்ச்சியில் விருப்பம் உடையவனாதலால், இவனது பயனற்ற இச்சகப் பேச்சுகளைக் கேட்டுச் சந்தோஷமடைவான். ஆனால் அவன் பசப்பு மொழிகளால் புலன்கெடாத உறுதியான மனம் உடையவனாயிருந்தான். அவன், கொடியவனாயிருந்த போதிலும் பிறர் கருத்தை யறிவதில் சமர்த்தன். டமோகிலிஸின்

ஓயாத உபசாரப் பேச்சுக்களில் வேந்தன் வெறுப்புற்று, டமோகிலிஸ் தனது வாழ்நாட்களில் எப்போதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளக் கூடிய நீதி ஒன்றை அவனுக்குக் கற்பிக்க எண்ணினான்.

ஒருநாள் அவ்வரசன், முகஸ்துதி பேசுவதில் இணையற்றவனாகவும், தனது தோழனாகவுமுள்ள டமோகிலிஸை அழைத்து, "அரியணையில் அமர்ந்திருப்பதால் உண்டாகும் ஆனந்தத்தைப் பற்றி நீ ஓயாமல் புகழ்ந்து போற்றுகிறாய். உன்னால் மெச்சிப் பேசப்படுகிற இந்தப் பாக்கியத்தை ஒரு நாளாவது நீ அனுபவிக்கவேண்டும் என்று விரும்புகிறேன். நாளைய தினம் என் குடையின்கீழ் உள்ள சிற்றரசர்களும், பிரபல பிரபுக்களும், தனவான்களும், நான் அவர்களுக்கு அளிக்க உத்தேசித்திருக்கும் விருந்திற்கு வருவார்கள். அப்பொழுது நீ எனக்குப் பிரதிநிதியாகச் சிங்காசனத்தில் வீற்றிருந்து மன்னனாக இருக்கும் பெருமையை அனுபவிப்பாயாக! விருந்து முடிந்தபின் சிங்காசனத்தினின்று இறங்கி முன்போல் சாதாரண பிரஜையாகத் திருப்தியாய் ஜீவிக்க விரும்புவாய்" என்று கூறினன்.

'மலடி, பிரஸவத்தின் கஷ்டத்தை அறியாதது போல்' அரசத் தன்மையிலுள்ள வருத்தத்தை அறியாதவனான டமோகிலிஸ், "வேந்தே, நீர் நினைக்கிறபடியே சிறிது நேரம் அரியணையில் வீற்றிருப்பதனால் சந்தோஷம் நிறைவாகும் என்று தோன்றவில்லை. அரியணைவிட்டு இறங்கியதும் துக்கம் உண்டாகுமேயன்றி மகிழ்ச்சி உண்டாகாதே" என்று கூறினான்.

அரசனிடம் அவ்வாறு உரைத்தபோதிலும், அவன் தனக்குக் கிடைக்கப்போகிற சிலமணி நேர பத

வியைக் குறித்துத் தனது நண்பர்களிடம் மிகப் பெருமையாகப் பேசிவிட்டு, மறுநாள் பொழுதுபுலரு வதை மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்தபடியே யிருந் தான்.

இவன் எதிர்பார்த்த விருந்து வேளையும் வந்தது. விருந்தினர்களும் தங்களுக்கென்று அமைக்கப்பட்ட ஆசனங்களில் வந்து அமர்ந்தார்கள். அரசனது உத்தர வின்படியே அரசர்க்குரிய அணிகலம் பூண்டவனாய்ப் பொன்முடியைத் தலையில் தரித்துக் கையில் செங்கோல் ஏந்திப், பொன் ஆடை யுடுத்து, டமோகிலிஸ் சிங்கா தனத்தில் வீற்றிருந்தான். அப்பொழுது, மன்னனாகிய டைனேஷியஸ் விருந்தினர்களை நோக்கி, "எனக்கு நீங்கள் எவ்விதமான மரியாதைகளையும், வணக்கத்தை யும் செலுத்துவீர்களோ, அவ்விதமான மரியாதைகளை யும், பணிவையும், இப்பொழுது சிங்காதனத்தில் வீற் றிருப்பவருக்குச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று கூறினான்.

டமோகிலிஸுக்குக் கிரீடம் தலைச் சுமையாய்த் தலைவலியை உண்டாக்கிற்று. இராஜ போஜனத்தில் ஏதாவது விஷம் கலந்திருக்கிறதோ என்று கண்டு பிடிப்பதற்கு நியமிக்கப்பட்ட ஊழியர்கள், ஒவ்வொரு பதார்த்தங்களையும் ருசிபார்த்துத் தனக்குக் கொடுக்கிற தனால் உண்டான காலதாமதத்தைக் குறித்து அவன் மிகவும் கோபங்கொண்டான். என்றாலும், தன் தோழர் கள் பேசும் நயமொழிகள் அவன் மனத்திற்கு மகிழ்ச்சி யைத் தந்தன. இவ்வாறு செருக்கும் களிப்பும் அடைந் தும் தலையை நிமிர்த்தி உட்காருஞ் சமயத்தில், இரு புறமும் கூர்மையையுடைய வாள் இரண்டு, தன் தலைக்கு

நேரே, ஒரு மயிரிழையால் கட்டப்பட்டு, மேற்கூரையி லிருந்து தொங்கவிட்டிருந்ததைக் கண்ணுற்றான். அவன் மனம் நடுங்கித் தடுமாறியது. எந்த நேரத்தில், அவ்வாள் தன் தலையில் விழுந்துவிடுமோ என்ற அச்சத் தினால் உடல் நடுங்கிச் சிங்காதனத்திலிருந்து உடனே இறங்கிவிட உத்தரவு அளிக்கவேண்டுமென்று மன் னனை வேண்டினான். வேந்தனோ அவன் படும் அவஸ் தையைப் பார்த்து ஆனந்தித்துக், கோபத்தோடு கூடிய புன்சிரிப்புடன் அவனை நோக்கி, "நீ இறங்கக்கூடாது" என்று கடுமையாகக் கூறினான்.

" உனது தலைக்கு நேராகத் தொங்கவிட்டிருக்கும் வாள், உன் தலையின்மீது விழுந்தாலும் விழலாம் என் பது உண்மையே! ஒருகால் விழாமலும் இருக்கலாம். இப்படிப்பட்ட அபாயமான நிலைமையில் எப்பொழுது மரணம் நேரிடுமோ என்ற எண்ணத்துடன், நீ சிம்மா சனத்தில் அமர்ந்திருக்கவேண்டும் என்பதே எனது விருப்பம். உயர்ந்த பதவியில் இருப்பவர்கள், பார்ப்ப வர்களுக்கு யாதொரு விசாரமும் இல்லாமல் சுகமாய் இருப்பவர்களைப் போலத் தோன்றுவார்கள். உண்மை யாய்ப் பார்க்கும்பொழுது அவர்களுக்கு இருக்கும் மனோவிசாரம் இவ்வளவென்று சொல்லமுடியாது. ஏனெனில், எந்தச் சமயத்தில் எந்த ஆபத்து வருமோ என்ற பயம் அவர்கள் மனத்தைவிட்டு நீங்காது. ஆத லால் அரசர்கள் சுகமாய் வாழ்கிறார்கள் என்றும், அவர் களைப்போன்ற சுகஜீவிகள் உலகத்திலில்லை யென்றும் இச்சகம் பேசும் உனது அறிவின்மையை நீக்கிக் கொள். பல துன்பங்களுக்கு இடையில் தைரியமாயும்,

சந்தோஷமாயும், நிர்விசாரராய் வாழ்நாளைக் கழிக்கும் மானிடரே புகழ்தற்கு உரியவர்கள். ஆகையால் நீ விசாரம் அற்றவனாய் முகமலர்ச்சியோடு விருந்தின ருடன் உரையாடுவாயாக. அப்படி இருந்தால் நான் உன்னைத் தைரியவான் என்று கருதுவேன்" என்று கூறினான் காவலன்.

இப்படிப்பட்ட சங்கடமான நிலைமையில் அகப் பட்டுக்கொண்ட டமோகிலிஸ், கோழை மனமுள்ள வனாய்ப் பயத்தினால் பீடிக்கப்பட்டவனாய், ஒருபிடி அன்னங்கூடப் புசிக்க இயலாதவனாய்த், தலைக்குமேலே தொங்கிக் கொண்டிருந்த கூர்மையான வாள்கள் எப் பொழுது தன் தலையில் விழுந்து விடுமோ என்ற ஏக் கங்கொண்டவனாய், அந்தப் பட்டயத்தைக் கவனித்த படியே இருந்தான். அவன், தன்னை அந்த ஆபத்தான நிலைமையிலிருந்து விடுவிக்கும்படி பார்த்திபனைப் பன் முறை இரந்து வேண்டினான். கொற்றவனோ அவனது வேண்டுகோளுக்குச் சிறிதும் இரங்காது, அவன் அரு கில் சில காவலாளரை யிருக்கச் செய்து, அவனுடைய மூடத்தனமான முகஸ்துதியால் உண்டான ஆபத்தை முழுதும் அனுபவித்துத் தீரும் வரையில் அவனைச் சிங்கானத்தினின்று கீழே இறங்க விடாது இருக்கும் படி கட்டளை யிட்டனன்.

நெடுநேரமான பின்னர் விருந்தும் முடிந்தது. வாணும் விழா திருந்தது. "டமோகிலிஸும் தான் தரித் திருந்த இராஜ உடைகளையும் கிரீடத்தையும் களைந்து விட்டு அரியணையினின்று கீழே இறங்கிவிடலாம்" என்று அரசனால் கட்டளை யிடப்பட்டது. இந்த உத் தரவு அரசன் வாயிலிருந்து வெளிவருவதற்குமுன்

னரே மிகவும் சந்தோஷத்துடன் ஆபத்தில்லாத இடத்திற்கு டமோகிலிஸ் வந்து சேர்ந்து விட்டான்.

பின்பு அவன், குபேர சம்பத்துங்கூட ஒருவனுக்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணாது என்றும், உயர்ந்த பதவியில் மகிமையும் பெருமையும் இருந்தபோதிலும், அவ்வளவிற்குத் தக்கபடி துன்பங்களும் உண்டு என்றும், அப் பதவியை விரும்புகிறவன் தைரியமுள்ளவனும், பராக்கிரமமுள்ளவனும் இருக்கவேண்டும் என்றும், பின்னும் அந்நிலையில் இருப்பவர்கள் மூடர்களான இச்சகர்களுடைய நய வசனங்களுக்கு எள்ளளவேனும் இணங்காதவர்களாயும் இருத்தல் அவசியம் என்றும் இத்தகைய சிறந்த நீதிகளைக் கற்றுக் கொண்டான்.

## 14 விளையும் பயிர் முளையிலே தெரியும்

இங்கிலாந்திலே ஒரு சிறிய நகரத்தில் விதவை ஒருத்தி யிருந்தாள். அவள் மிகவும் ஏழை. அவளுக்கு நான்கு குழந்தைகள் இருந்தன. அவளுடைய புருஷன் திடீரென்று இறந்துவிட்டபடியால், அவளும் அவளது மக்களும் வறுமையால் பீடிக்கப்பட்டார்கள். அவளுடைய மூத்த பிள்ளை சிறுவனாக இருக்கும்பொழுதே பொருள் தேட வேண்டியவனானான். அவனே அந்தக் குடும்பத்தை ஆதரிக்கும்படி ஏற்பட்டது. ஆதலால், அந்தப் பையன் ஒரு தனவான் வீட்டில் கூலி வேலைக்கு அமர்ந்தான். அவன், தனக்குக் கிடைக்கும் கூலியைக் கொண்டு அவர்களைக் காப்பாற்றி வந்தான்.

ஒரு நாள், ஜேக் என்னும் பெயருள்ள அச் சிறுவன், அதிக பாரமுள்ள கூடை யொன்றைச் சுமந்து

செல்ல வேண்டியிருந்தது. அவனோ சிறியவன்; பளுவோ பெரியது. என்ன செய்வான் பாவம்! அவன் செல்லவேண்டிய பாதையோ செங்குத்தான பாறையின் மீது சென்றது. மிகப் பாரமான சுமையைச் சுமந்து கொண்டு போவதே கஷ்டம். மேலும் அந்தக் கரடுமுரடான வழியில் செல்வது பின்னும் அவனுக்குப் பெருங் கஷ்டத்தை உண்டாக்கிற்று. ஒருவாறு சிறிது தூரஞ் சென்றதும், அவன் கூடையைக் கீழே இறக்கி வைத்து விட்டு இளைப்பாறினான்.

சிறிதுநேரங் கழித்து, எழுந்திருந்து கூடையைத் தூக்கிக்கொண்டு மெதுவாக நடந்துசென்றான். தாமதிக்காமல் தனது காரியத்தை முடித்து விடவேண்டும் என்று கருதி, நெற்றி வியர்வை கீழே சிந்தும்படி அவன் நடந்துபோனான். மூச்சுத் திணற அடிமேல் அடியெடுத்து வைத்து அவ்வழியே சென்றான். ஜேக் இப்படிக் கஷ்டப்பட்டுக்கொண்டு போகும்பொழுது, அவனை பிரட் என்பவன் சந்தித்தான். பிரட் சுமார் பதினான்கு வயதுள்ளவன். அவன் ஜேக், வருத்தத்தோடு நடப்பதைக் கவனியாமல் அவனை ஏற இறங்கப் பார்த்தான். "ஜேக், ஏன் இவ்வாறு உனது பலத்திற்கு அதிகமான பாரத்தைச் சுமந்துகொண்டு நத்தையைப் போல் நகர்ந்து செல்லுகிறாய்?" என்று பிரட் கேட்டான்.

அதற்கு ஜேக், "சுமப்பவனல்லவோ அறிவான் காவடிச் சுமை?" என்றான். பின்னும் அவன், "நான் அதிகக் கஷ்டப்பட்டுச் சுமந்து செல்கிறேன்; நீயும் என்னைப்போல் சிறியவனா யிருந்து, இப்படிப்பட்ட சுமையைத் தூக்கிக்கொண்டு சென்றால், அப்பொழுது அதன் கஷ்டம் உனக்குத் தெரியும்" என்றான். பிரட்

"அவரவர் நன்மைக்கு அவரவர்தான் பாடுபடவேண்டும்; நீ கூலிக்காக இப்படி உழைத்துக் கஷ்டப்படுகிறாய்" என்று கர்வத்தோடு பதிலுரைத்தான்.

அவன் சொன்னதைக் கேட்ட ஜேக் அவனைப் பார்த்து, "ஆம், நான் கூலிக்காகத்தான் வேலை செய்கிறேன். கூலிவேலையாயிருந்தாலும் அதை உண்மையோடும் முழு பலத்தோடும் செய்து முடிக்க வேண்டும் என்பது எனது கொள்கை. என் தாயார் இந்த நீதியைத்தான் எனக்குக் கற்பித்திருக்கிறாள். நான் 'தாய் சொல் துறந்தால் வாசகமில்லை' என்றபடி அவ்வாறே செய்து வருகிறேன்" என்று புன்சிரிப்புடன் கூறினான்.

பின்னும் பிரட்., இந்தச் சிறுவனை நெருங்கி, "ஜேக் உனது எஜமானனுக்கு உன்னைப் போன்ற சிறுவர்களை வைத்து வேலை வாங்குவதனால் அதிக லாபம் கிடைக்கலாம் என்று எண்ணுகிறேன். நீயும் எஜமானனுடைய காரியத்தை வெகு விரைவில் நிறைவேற்றக் கூடியவன். உன்னிடம் ஏதாவது சமாசாரம் சொல்லி யனுப்பினால் தந்திபோல் சீக்கிரத்தில் தெரிவிப்பாய்," என்று பரிகாசமாகச் சொன்னான்.

ஜேக், "சிநேகிதனே, இந்தச் சுமை கனமில்லாதிருந்தால் நீ சொன்னபடியே விரைவாகச் சென்று காரியத்தை முடிப்பேன், 'எருதின் நோய் காக்கைக்குத் தெரியுமா?' நீ பெரியவனாயிருந்தும் கஷ்டப்படுகிற எனக்கு உதவி செய்யவில்லை? நீ ஏன் வீணான வார்த்தைகளைப் 'புண்ணில் கோலிடுவதுபோல்' பேசிக் கொண்டு வருகிறாய்? இதுதானா புருஷ லக்ஷணம்?" என்று கேட்டான்.

அதற்குப் பிரட், " அழுதாலும் பிள்ளை அவளே பெறவேண்டும் என்பதை நீ யறியாயா ? இந்த உலகத்தில் ஒவ்வொருவரும் சுமக்கவேண்டிய பாரம் ஒன்று உண்டு. நான் மற்றவர்களுடைய பாரத்தைச் சுமக்கக் கூடாதே. நீ உனது புத்திக்கெட்டின மட்டும் உன் வேலையைச் செய் " என்று கூறினான்.

ஜேக், " ஆம், என் வேலையை நான்தான் செய்ய வேண்டும். ஆனால் நான் எவரேனும் கஷ்டப்படுவதைக் கண்டால், சகியாமல் அவருக்கு நிச்சயமாக என்னால் செய்யக் கூடிய உதவியைச் செய்வேன் " என்றான்.

ஜேக் கூறிய இம்மொழிகளைக் கேட்ட ஒரு பிரபு, அவனுக்கு எதிரில் வந்து நின்று, " வாலிபனே, நீ பிறர்க்கு உதவி செய்வதாகக் கூறியது உண்மைதானா?" என்று கேட்டார். அதற்கு அவன், " என்னைப்போன்ற சிறியவனொருவன் பெரியதொரு பாரத்தைத் தூக்க முடியாமல் கஷ்டப்பட்டுச் சோர்ந்து போவதைக் காணின், அதோ கையைக் கட்டிக்கொண்டு நிற்கும் பிரட் என்பவனைப்போல் நிற்கமாட்டேன். உடனே என்னாலியன்ற உதவி புரிவேன் " என்று பதிலுரைத்தான்.

அவன் கூறியதைச் செவியுற்ற அந்தப் பிரபுவின் புத்திரி, " அப்பா, நான் அந்தச் சிறுவனுக்கு உதவி செய்யட்டுமா ? " என்று கேட்டாள். பின்பு அவள் அவனது கையிலிருந்த கூடையைத் தூக்க முயன்றாள். அந்தக் கூடை அவளுடைய பலத்திற்கு மிஞ்சினதாக இருந்தது. அந்தப் பிரபு தனது மகளைத் தட்டிக் கொடுத்து, " நீ அவனுக்கு உதவி செய்ய ஆசைப்படுகிறாய்! ஆனால் உனக்கு அதற்குத் தகுந்த பல

யில்லையே!" என்று சொன்னார். பின்பு அவர் பிரட்டைப் பார்த்து, "நீ ஏன் இவனுக்கு இந்த மலையின் உச்சி வரைக்கும் கூடையைத் தூக்கிக்கொண்டு போகும் விஷயத்தில் உதவி செய்யக் கூடாது?" என்று வினவினார்.

அதற்குப் பிரட், "எனக்கு அந்த வேலைக்குப் போதுமான சம்பளம் கொடுக்கப்படமாட்டாது. நான் இவ்வாறு மற்றவர்களுக்காக வேலை செய்வேனானால் என் உடம்பு இளைத்துப் போகும்" என்று பெருமையாய்ப் பதிலுரைத்தான்.

பிரபு, அவ்வளவு சிறுவதிலேயே உலக ஞானம் அடைந்து அவ்வாறு தந்திரமாகப் பேசும் பிரட் என்பவனையும், கபடம் அற்ற மனத்தையுடைய ஜேக் என்பவனையும் ஒப்பிட்டுப் பார்த்தார். "விளையும் பயிர் முளையிலே தெரியும் என்கிறார்களே! அதற்கு உதாரணமாக இவர்கள் பெரியவர்களான பின்பு எப்படிப்பட்டவர்களாக இருக்கப் போகிறார்களென்பதை அறிந்துகொள்ள வேண்டும்" என்று தீர்மானித்தார்.

பின்பு பிரபு, "ஜேக், மற்றையோர் உனக்கு உதவி புரியாவிட்டாலும் நான் உனக்கு உதவி செய்கிறேன். நம்முடைய உலக வாழ்க்கையில் நாம் மேற்கொள்ளவேண்டிய கஷ்டங்கள் அநேகம் உண்டு. இவ்விதமான கஷ்டங்களைப் பிறருடைய சகாயமில்லாமல் மேற்கொள்ளுகிறவர்களே உத்தம புருடராவர். இந்த உலகத்தில் உயர்ந்த பதவியிலிருக்கும் அநேகர், பாலியத்தில் தங்களுக்கு நேரிடும் கஷ்டங்களைப் பிறருடைய உதவியை நாடாமல் மேற்கொண்டவர்களே யாவர். நீயும் அத்தகைய கஷ்டத்தின் பயனாய் உயர்ந்த பதவியை அடைவாய்" என்று கூறினார். அவர் அவனுடைய

கூடையை வெகு எளிதாக எடுத்துக்கொண்டு சென்றார். அவனும் அவருடன் நடந்து சென்றான்.

மலையின் உச்சியை யடைந்தவுடனே பிரபு, கூடையைக் கீழே வைத்துவிட்டு, அவனைப் பார்த்து, "நீ இனிக் கஷ்டமில்லாமல் கூடையை எடுத்துச் செல்லக் கூடுமென்று நினைக்கிறேன்" என்றார். ஜேக் எதிர் பாராது தனக்குக் கிடைத்த உதவியைக் 'காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப் பெரிது' என்று மனத்தில் பாவித்துப் பிரபுவை நோக்கி, "நீர் பிரதி உபகாரங் கருதாது செய்த உதவிக்கு நான் என்ன பதில் செய்யப்போகிறேன்? எலி சிங்கத்திற்கு எவ்வாறு உதவியதோ, அவ்வாறே ஒரு கால் உமக்கு ஏதாவது துன்பம் நேரிட்டால், அப்பொழுது நான் என்னால் செய்யக்கூடிய உதவியைச் செய்வேன். அவ்வாறு உதவக் கடவுள் அருள் புரிவாரென நினைக்கிறேன்" என்று கூறினான். பிறகு ஜேக் சந்தோஷமாகக் கூடையைச் சுமந்துகொண்டு தனது வழியே சென்றான்.

நாளடைவில், ஜேக் உயர்ந்த பதவியை யடைந்தான். அவன் அவ்விதம் மேலான பதவிக்கு வந்ததற்குக் காரணம் அவனுக்கு இளமையில் ஏற்பட்ட கஷ்டங்கள் யாவும், அவனது மனோதைரியத்தையும், பொறுமையையும், விடா முயற்சியையும் அபிவிருத்தி செய்தமையால் அல்லவா?

ஜேக் வாலிபத்திலேயே தன்னுடைய வேலையைச் சந்தோஷத்தோடும் நம்பிக்கையோடும் செய்துவந்தான்; எவ்வித காரியத்தையும் எளிதாக மேற்கொள்ளும் ஊக்கத்தை யுடையவனா யிருந்தான். அவன் வாலிபனா

யிருந்தபோதும், தன்னிலும் எளியவரைக் கண்டால் அவர்களுக்கு உதவி செய்வதை மறந்ததில்லை. மேலும் பிறர்க்கு உதவி புரிவதிலேயே கருத்து உடையவனும் காலங்கழித்து வந்தான்.

இவனது தோழனான சுயநலப் புலியாகிய பிரட் என்பவன், மிகுதியாகப் பொருளீட்டித் தனவானானான். அவன் பிறர்க்கு உதவி செய்யுங் கருத்தில்லாதவனாய்த் தன் பணத்தை வட்டிக்கு விட்டுத் தயை தாட்சணியம் பாராது வசூலித்து, மேன்மேலும் தனது ஆஸ்தியைப் பெருக்கினான்.

ஒருநாள் மாலை வேளையில், வயோதிகரான வொரு பிரபு, தாங்கமுடியாத விசனத்தினால் தலை குனிந்த படியே உட்கார்ந்திருந்தார். அப்பொழுது அவருடைய அருமைப் புதல்வி, தனது தந்தையின் பரிதாபகரமான நிலைமையைக் கண்டு மனம் பொறாமல், அவரிடம் சென்று "எனது அருமைத் தந்தையே, நீர் ஏன் விசனப்படுகிறீர்? சிறிது நேரத்திற்கு முன்பு இங்கு வந்த மனிதன் யாவன்? அவன் இங்கு வந்த காரணம் என்ன?" என்று இனிமையாக மெல்லிய குரலோடு வினவினள்.

அப்பிரபு, மகளைப் பார்த்து, "இங்கு வந்தவன் கல்நெஞ்சினனான பிரட் என்பவன். இவன் நமக்குக் கடன்கொடுத்திருக்கிறான். நான் 'கடன் வாங்கினவன் மடியில் கலநெருப்பு' என்றபடி வருந்துகிறேன். நான் பட்ட கடனை உடனே கொடுத்துவிட வேண்டுமென்று பிரட் என்னை நிர்ப்பந்திக்கிறான். கையிலே காசில்லை. கப்பல்களோ இன்னும் வந்து சேரவில்லை," என்று வருத்தத்தோடு உரைத்தார்.

அவரது குமாரத்தி அவரை நோக்கித், "தந்தையே, அவனன்றி ஓர் அணுவும் அசையாது. மனோதைரியத்தை இழக்கவேண்டாம். மரம் வைத்தவன் அதற்குத் தண்ணீர் ஊற்ற மாட்டானா? கல்லினுள் தேரைக்கும் 'கருப்பைக்குள் முட்டைக்கும், விருப்புற்று அமுதளிக்கும் மெய்யன்' நம்மைக் காவாது இருப்பானோ? இரான்! ஆதலின் நீர் கவலைப்படவேண்டாம்" என்று ஆறுதல் கூறினாள்.

அவ்விருவரும் அவ்வாறு பேசிக்கொண்டிருக்கும் பொழுது ஒருவன் அங்கு வந்தான். அப்போது பிரபு மகளைப் பார்த்து, " பிரட், எனது வறுமை நிலைமையைப் பலர் அறியக் கூறினான்போலும். நீ உள்ளே போ!" என்றார். வந்த மனிதன் பிரபுவின் அருகில் சென்று வந்தனம் செய்தான். உடனே பிரபு, "நீர் யார்? எனக்கு இன்னாரென்று தெரியவில்லை? நீர் இங்கு வந்த காரணம் யாது?" என்று கேட்டார்.

வந்தவன் பிரபுவைப் பார்த்து, " பிரபுவே, நான் வந்த நோக்கத்தைச் சொல்லுகிறேன். நிதானமாய்க் கேளும். நான் சொல்லப்போகிற விஷயத்தைப் பற்றித் தவறாக எண்ணாது மன்னிக்க வேண்டுகிறேன். சிறிது நேரத்திற்கு முன்புதான், நீர் ஒரு சங்கடமான நிலைமையில் அகப்பட்டுக்கொண்டு இருப்பதாக அறிந்துகொண்டேன். 'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்றபடி நான் சிறுவனாக இருக்கும்போது, நீர் எனக்குக் கைம்மாறு கருதாது உதவிசெய்தீர். உமக்குப் பிரதியுபகாரம் செய்யும்படியான பாக்கியம் எப்பொழுது ஏற்படுமோ என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இப்பொழுது அப்படிப்பட்ட சமயம் ஏற்பட்டதைக் கண்டு

எனது நன்றியறிதலைக் காண்பிக்க வேண்டும் என்ற அவாவினால் தூண்டப்பட்டு இங்கு வருந்திருக்கிறேன்" என்று மொழிந்தான்.

பிரபு அவனைப் பார்த்து, "நீ உனது நன்றி யறிதலைக் காட்டவா இவ்விடத்திற்கு வந்தாய்? நான் உன்னை இதற்குமுன் ஒரு நாளும் பார்த்ததில்லையே!" என்றார். அவன் "நீர் என்னைப் பார்த்திருக்கிறீர், ஆனால் நீர் பார்த்து இப்பொழுது இருபது ஆண்டுகளாய்விட்டன. நான் அப்பொழுது ஒரு மலைச்சாரலில் ஒரு பளுவான கூடையைச் சுமந்து செல்ல முடியாது தவித்துக் கொண்டிருந்தேன்; நீர் அந்த வேளையில் அந்தக் கூடையை மலையின் உச்சிவரையில் எடுத்துக் கொண்டுவந்து உதவி புரிந்தீர். அச்சம்பவம் உமது ஞாபகத்திலிருக்கும் என்று எண்ணுகிறேன்" என்றான்.

பின்னும் அவன், "நான் இப்பொழுது தனவானாக இருக்கிறேன். 'அல்லல் ஒருகாலம்; செல்வம் ஒரு காலம்' என்பதற்கு எனது வாழ்க்கையே ஓர் உதாரணமாகும். இந்த ஆபத்துக் காலத்தில் தங்களுக்கு நான் உதவிபுரிய அனுமதிக்கப் பெற்றால், இந்த உலகத்தில் என்னைவிடச் சிறந்த பாக்கியவான் ஒருவனும் இருக்க மாட்டான் என்று துணிந்து கூறுவேன்" என்றான்.

மறுநாள் பிரட் தன்னுடைய தஸ்தாவேஜுகளைக் கொண்டுவந்து, பிரபு தனக்குக் கொடுக்கவேண்டிய பெருந்தொகையைச் சொன்னான். உடனே அப்பிரபுவுக்குப் பிரதியுபகாரஞ் செய்யவந்த தனவானான ஜேக்கின் உதவியினால் அந்தக் கடன் தொகை முழுவதுஞ் செலுத்தப்பட்டது.

சில நாட்கள் கழிந்த பின்னர், அந்தப் பிரபு ஆவலோடு எதிர்பார்த்திருந்த கப்பல்களும் சீனு தேசத்திலிருந்து திரும்பி வந்தன. பிரபுவும் ' வந்தது கப்பல்! மலர்ந்தது தொப்பை' என்றபடி மகிழ்ச்சி யடைந்தார். பின்பு அப்பிரபு, தான் பட்ட கடன் யாவற்றையும் செலுத்திவிட்டுச் சந்தோஷமாகத் தமது வாழ்நாளைக் கழித்தார்.

ஜேக் என்பவனும் பிரட் என்பவனும் சிறுபிராயத்தில் எவ்விதம் இருந்தார்களோ, அவ்விதமாகவே வயது முதிர்ந்த காலத்திலும் சிறிதும் மாறுபாடு இல்லாம லிருந்தார்கள். ஜேக் பிறர்க்கு உதவி செய்வதிலேயே கருத்தைச் செலுத்திக் காலங் கழித்தனன். பிரட் பிறர்க்கு உதவி செய்யாது தனது நலத்தையே விரும்பித் தேடுவதில் ஊக்கமுள்ளவனாய் இருந்துவந்தான்.

' கல்வியோடு வீரம் கருது பெருஞ்செல்வம்
தோல்குடியும் மானம் துணைவலியும்-சொல்லுமிவை
நல்லவரை மேவின் நலம்பயக்கும்; தீயவரைப்
புல்லின் பயக்கும் புகர் '. —நீதிமஞ்சரி

## 15. விருந்தோம்பலின் இன்றியமையாமை

' செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பார்
நல்விருந்து வானத் தவர்க்கு '

பிரிகியா என்ற மலைநாட்டில் பிலேமோன் என்பவன், தனது மனைவியாகிய பாக்கிஸ் என்பவளோடு இல்லறம் நடத்தி வந்தான். அவனும் அவனது மனைவியும் மிகவும் வயது முதிர்ந்தவர்களாகக் காணப்பட்டார்கள். அவர்கள் மிகவும் ஏழைகளாயும் இருந்தார்கள். அவ்வாறு வயது முதிர்ந்தவர்களாயும் ஏழைகளாயு மிருந்த

போதிலும், அவ்விருவரும் இளமையில் தம்மில் அன்பு மிகுந்தவராய் வாழ்ந்ததுபோலவே, முதுமையிலும் அன்பில் சிறிதும் குறையாமல் இனிதாகக் காலங் கழித்து வந்தார்கள்.

மலையின் அடிவாரத்தில் அநேகர் வாசஞ் செய்து வந்தார்கள். பிலோமோன் வீடானது மற்றையோரது வீட்டிற்கு அப்பால் தனிமையாகக் கட்டப்பட்டிருந்தது. 'பாம்பொடு பழகேல்' என்பதற்கிணங்க மிகவும் கொடியவர்களான அந்தக் கிராமத்துக் குடிகளுடன் சக வாசஞ் செய்ய இஷ்டமில்லாதவர்களாய் அவர்கள் தனி வீட்டில் வசித்து வந்தார்கள். அவர்கள் தம் வீட்டிற்கு வரும் விருந்தினரைத் தவறாது உபசரித்துவந்தார்கள். ஆனால் அவர்கள்,

"கொம்புளதற் கைந்து ; குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே ;—வம்புசெறி
தீங்கினர்தங் கண்ணிற் றெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி."

என்ற நீதியின் உண்மையைக் கடைப்பிடித்து, அக்கிராமத்திலுள்ள ஜனங்களோடு எவ்விதமான விஷயங்களிலும் கலந்து கொள்வதில்லை. ஏனென்றால் அவ்வூரார் துன்மார்க்கராயும், சுயநலப் பிரியராயும், பிறருக்குத் தீங்கு செய்பவராயும் இருந்தார்கள். அதுவுமன்றி அவர்கள், ஓர் ஊரிலிருந்து வேறோர் ஊருக்குப் போகிற பிரயாணிகள் வழிதப்பி, இரவில் தம்மூரில் வந்து தங்க நேரிட்டால், அவர்கள்மீது நாய்களை ஏவிக் கடிக்கச் செய்தல், கற்களால் அடித்தல் முதலிய துஷ்டச் செயல்களால் ஆனந்தம் அடைவது வழக்கம்.

ஒரு நாள், பிலேமோனும் அவன் இல்லாளும் அடுப்பின் அருகில் உட்கார்ந்து குளிர் காய்ந்துகொண்டு களிப்புட னிருந்தார்கள். அன்றைய தினம் பகலில் ஒரு பெரும்புயல் கிளம்பி, வரவர அதிகரித்தது. அவர்கள் மாலைப்போஜனம் உண்ண ஆரம்பிக்கையில், அக் கிராமத்தில் ஏற்பட்ட ஒரு பெருங் கூக்குரல், அவர்களது செவியில் விழுந்தது. 'ஐயோ, மிருகங்கள் கூட வெளிவராத இந்த இரவில், இவ்வூரார் தங்கள் வழக்கப்படி ஏதோவொரு வழிப்போக்கனை வருத்துகிறார் போல் தெரிகிறதே; அந்த அகதியின் நிலைமை ஆயிரம் பாம்புகளிடம் அகப்பட்ட தேரையைப்போல் அல்லவா இருக்கும்?' என்று நினைத்து அவ்விருவரும் துயரடைந்தனர்; "இவ்வூரார், ஈவு இரக்கமில்லாதவர்களாய்த் தம்முயிரைப்போல் மன்னுயிரையும் பாவிக்கவேண்டும் என்ற நீதியையுங் கருதாது, எவரையும் துன்பத்திற்குள்ளாக்குகின்றனரே" என்று வருந்தித் துக்கித்தனர்.

பின்பு பிலேமோன் தனது மனைவியை நோக்கி, "ஒருகால் அந்த அகதி நமது வீட்டுக்கு வருதல் கூடும். வந்தால் நாம் அவ்வகதிக்கு இடங்கொடுத்து ஆதரிக்க வேண்டும்" என்று கூறினான். அவளும் அதற்கு உடன்பட்டு அக் கதியற்றவன் எப்பொழுது வருவானோ என்று எதிர் பார்த்திருந்தாள்.

சிறிது நேரத்திற்குள் தமது வீட்டை நோக்கி யாரோ சிலர் வருகிற காலடி ஓசையைக் கேட்டதனால், பிலேமோன் விரைந்து சென்று கதவைத் திறந்தான். உடனே, திடீரென்று தோன்றிய மின்னலின் ஒளியினால் இருவர் வெளியே நிற்பதைக் கண்டான். அவர்

களில் ஒருவன் உயரமுள்ளவனுய்க் கொடிய பார்வை யோடு இராஜதேஜசு உடையவனுயும் இருந்தான். மற்றொருவன் மெலிந்த தேகமுடையவனுய்க் கட்டழகுள்ள வனு யிருந்ததோடு கம்பீரமான நடையை யுடையவனு யும் விளங்கினன். அவ்விருவரும் பாதாதிகேசம் வரை யில் ஓர் அங்கியை அணிந்திருந்தார்கள். அவர்களது உடை முழுவதும் மழையில் நனைந்து நீர் சொட்டிக் கொண்டிருந்தது. பிலேமோன், அவர்கள் இருவரை யும் வீட்டிற்குள் அழைத்துச் சென்றதும் கதவைத் தாளிட்டான்; அவர்களை வரவேற்றுத் தன் வீட்டி லுள்ள உணவைப் புசித்து இராத்தங்கிப் போகும்படி வேண்டினன்.

அவர்கள் அவனது வேண்டுகோளுக்கு இணங்க, அவன், அவர்களை நெருப்பின் சமீபத்தில் அமர்ந்து குளிர்காய்ந்து கொள்ளும்படி சொன்னன். பின்பு அவன் நனைந்திருந்த அவர்களது ஆடைகளைக் கழற்றி உலரும்படி தொங்கவிட்டான். அவர்கள் சாப்பிடுவ தற்காக மேஜையின்மீது ரொட்டியும், பாலும், பழமும், தேனும், கீரையும் கொண்டுவந்து வைக்கப்பட்டன.

பிலேமோன் அவர்களை உற்று நோக்கினன். தான் அதுவரையிலும் பார்த்திராத அவர்களது விசேஷ உருவத்தைக் கண்டு வியப்படைந்தான். அந்தக் கிரா மத்திலுள்ள ஜனங்களின் அநீதிச் செயல்களைக் கண்ட தனு லுண்டான கோபக்குறிகள், அவ்விருவருள் மூத் தோனது முகத்தில் நன்ருய் விளங்கின. இளையோன், அழகு மிகுந்த உருவத்தை யுடையவனு யிருந்தமை யோடு, யாவருங் கண்டு அதிசயிக்கத்தக்க தெய்வத் தன்மை வாய்ந்தவனுகவும் காணப்பட்டான். அவனது

பாத ரட்சைகளிலும், தலைப்பாகையிலும் சிறிய சிறகுகள் இருந்தன. அவன் நடக்கும்போது அவனது பாதங்கள் பூமியில் படிகின்றனவோ இல்லையோ என்று சந்தேகிக்கும்படியாகவே யிருந்தன. அவனுடைய கையிலிருந்த கோலின் முனையில் சிறிய சிறகுகள் இருந்தன. மேலும் அந்தக் கோலைச் சுற்றி இரண்டு சர்ப்பங்களும் இருந்தன.

இப்படிப்பட்ட குணங்களையுடைய அவ்விருவரையும் பிலேமோன் போஜனஞ் செய்யும் பொருட்டு அழைத்ததும், அவர்கள் மேஜையின் அருகில் வந்து உட்கார்ந்தார்கள். அந்த விருந்தினர் இருவரும் ஜூபிடர், (Jupiter), மெர்க்குரி (Mercury) என்ற தேவதைகள் என்பதைப் பிலேமோனும் அவனது மனைவியும் அறிந்து கொள்ளவில்லை. 'அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும்' என்பதற்கேற்ப அத்தெய்வ புருஷர்கள், அந்த ஊரிலுள்ள தீய ஜனங்களைத் தண்டிப்பதற்காகவே அங்கு வந்தார்கள். அவ்வூராரின் அக்கிரமச் செய்கைகள் தேவர்களுக்கு முன்னமே தெரிந்திருந்தபோதிலும், அதுவரையிலும் பொறுத்துக்கொண்டு இருந்தார்கள். அப்பொழுது அவர்களது துஷ்ட செயல்கள் தேவர்களும் சகிக்கக் கூடாதபடி அளவுக்கு மிஞ்சி யிருந்ததனால், இனி அவர்களைச் சிட்சிக்கவேண்டும் என்னும் தீர்மானங் கொண்டவர்களாய் வந்த தேவ புருஷர்களே அன்றி அவர்கள் வேறல்லர்.

அவ்விருவரும் பிலேமோனையும் அவனது இல்லாளையும் நோக்கித் தாங்கள் அக்கிராமத்திலுள்ள கொடிய மனிதர்களால் அடைந்த துன்பங்களையும், அவற்றை

நீக்கித் தங்களை உபசரிக்க ஒருவரும் முன்வராததையும் மொழிந்து, இனி அவ்வூரிலுள்ள மாந்தரை நீரினால் அழிக்கப் போவதாகவும், தங்களை நன்கு வரவேற்று உபசரித்த இவ்விருவரையும் காப்பாற்றுவதாகவும் விளம்பினார்கள்.

பின்னர் ஜூபிடர், பிலேமோனைப் பார்த்து, "நீங்கள் இருவரும் நரைத்துத் திரைத்து வயோதிகர்களா யிருந்த போதிலும், உங்களது முகத்தில் ஒளி மிகுந்திருப்பதற்குக் காரணம் என்ன?" என்று வினவினார். அதற்கு அவன், "நாங்கள் இருவரும் அன்றிற் பறவைகளைப்போல இணைபிரியாது குன்றாத அன்புள்ளவர்களா யிருப்பதினாலும், பிறர்க்கு நன்மை செய்தலாகிய பாக்கியத்தைப் பெற்றிருப்பதனாலும், 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்னும் மூதுரைப்படி, முகத்தில் பிரகாசங் காணப்படுகிறது போலும்," என்று வினயமாகப் பதிலுரைத்தான்.

அந்த அற்புத விருந்தினர்கள் உண்ணும்பொழுது ஜாடியிலிருந்த பால் முழுவதும் செலவழிந்து விட்டது. அதனால், மெர்க்குரி அவர்களைப் பார்த்து இன்னுஞ் சிறிது பால் வேண்டும் என்று கேட்டார். அப்பொழுது பிலேமோனின் மனைவி, "பால் முழுவதும் செலவாகி விட்டதே. இனிக் கொஞ்சங்கூட இல்லையே" என்று மிகவும் வருத்தத்துடன் பதில் கூறினாள்.

மெர்க்குரி, பால் வைத்திருந்த காலிப் பாத்திரத்தை எடுத்துக் குலுக்கினான். அப்பாத்திரத்தில் நுரையோடு பால் நிரம்பி வழிந்தது. பிலேமோன் தான் பருகுவதற்காக ஒரு பாத்திரத்தில் வைத்திருந்த தண்ணீரை எடுத்துப் பருகும்போது, அது அதிமதுரமான

திராட்சரசத்தைப்போல் உருசியாயிருந்தது. இவ்விதமாகவே அவ்விருந்தினர் தொட்ட வஸ்துக்களெல்லாம் அதிமதுரமான வஸ்துக்களாய் மாறினதுமன்றி, அவர்கள் வீட்டிலிருந்த அற்ப உணவு அரசர்களது மாளிகையிலிருக்கும் அறுசுவை உண்டிகளாக மாறின. இப்படிப்பட்ட அற்புத நிகழ்ச்சிகளைக் கண்ணுற்ற பிலேமோனும் அவனது மனைவியும், தங்களது வீட்டிற்கு வந்திருப்பவர்கள், சாதாரண மனிதர்கள் அல்லர் என்று அறிந்து கொண்டனர். ஆனால் அவர்களை "நீங்கள் யார்?" என்று கேட்க மனந் துணியவில்லை. அவ்விருவரும் அந்த விருந்தினர்களுக்குத் தங்களது படுக்கை அறையை விட்டு விட்டு, அடுப்பின் அருகில் வெறுந் தரையில் படுத்து உறங்கினர்.

மறுநாள் அதிகாலையிலெழுந்து விருந்தினருக்காக ஆகாரம் சித்தஞ் செய்ய ஆரம்பித்தனர். அப்பொழுது விருந்தினர்களோ தாங்கள் உடனே புறப்பட்டுச் செல்ல வேண்டும் என்று சொன்னார்கள். பிறகு தங்களை இன்னார் என்றும் அறிவித்தார்கள். உடனே பிலேமோனும் அவனது மனைவியும் அந்தத் தேவர்களுடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். அந்தத் தேவர்கள் அவர்களை எழுந்திருக்கச் செய்து, அவர்களை நோக்கி, "இவ்வுலகில் இட்டுக் கெட்டார் எங்குமே யில்லை. நீங்கள் பயப்படவேண்டாம்; நாங்கள் வந்த நோக்கத்தை முன்பே கூறியிருக்கிறோம். நாங்கள் அந்தக் கிராமத்தையும் அதிலுள்ள ஜனங்களையும் அவர்களுடைய அநீதச் செயல்களுக்காக அழித்துவிட்டோம். இப்பொழுது அவ்வூர் ஒரு பெரிய ஏரியாய் விட்டது" என்று சொல்லி, அந்த ஏரியையும் காண்பித்தார்கள்.

இச் சம்பவத்தைக் கண்ட முதுமக்களாகிய அவ் விருவரும் மிகவும் மனங்கலங்கி அழுதார்கள். தேவர்கள் அவர்களைப் பார்த்து, "பாம்பை முட்டையிலேயும் புலியைக் குட்டியிலேயும் கொல்லவேண்டும் என்பதை யறியீர்களா? இந்தக் கிராமவாசிகளுக்காக நீங்கள் புலம்பவேண்டாம்! உங்களுக்கு ஏதேனும் வரம் வேண்டுமானால் கேளுங்கள்" என்று கூறினர். உடனே பிலேமோன்," எங்கள் இருவர்க்குமுள்ள அன்பு எப்பொழுதும் மாறாது. குறையாத பாக்கியமும் எங்களுக்கு உண்டு. இதுவே எங்களுக்குப் போதுமானது. போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து அல்லவா?" என்று பதிலுரைத்தான்.

தேவர்கள் இதைக் கேட்டுப் பின்னும் அவர்களை வற்புறுத்த, பாக்கிஸ் அவர்களை நோக்கி, "நாங்கள் மிகவும் வயது முதிர்ந்தவர்களாக இருக்கிறபடியால், சீக்கிரத்தில் எங்களுக்கு மரணம் நேரிடக்கூடும். அவ்வாறு நேரிடாதபடி நெடுங்காலம் நாங்கள் இருவரும் ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாமல் சந்தோஷமாகக் கூடி வாழ்ந்து, கடைசியில் இருவரும் ஒரே சமயத்தில் மரணம் அடைய வரம் அளிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தாள். "நீங்கள் விரும்பியபடியே அடையக்கடவீர்" என்று தேவர்கள் வரங் கொடுத்துவிட்டு மறைந்தனர்.

பின்பு பிலேமோனும் பாக்கிஸும் வீட்டிற்குள் புகுந்தபொழுது, தங்களது வீடு ஒரு பெரிய ஆலயமாக மாறியிருப்பதையும், அதனருகில் ஒரு தோட்டம் இருப்பதையும் பார்த்து வியந்தனர். அந்த ஆலயத்திலேயே இருந்துகொண்டு பணிவிடைக்காரர்களாய் அங்குவரும் வழிப்போக்கர்களுக்குத் தகுந்த உபசாரஞ் செய்து,

ஏழைகளுக்கு உணவும் உடையுந் தந்து, நெடுநாள் வாழ்ந்துவந்தார்கள். இவ்வாறு அவர்களது வாழ்நாள் சுகமாகக் கழிகையில், ஒரு நாள் சாயங்காலத்தில் ஒரே சமயத்தில் அவ்விருவரும் இவ்வுலகைத் துறந்து மேலுலகை அடைந்தார்கள்.

பிறகு அவர்கள் வசித்திருந்த ஆலயத்தின் இருபுறத்திலும் இரண்டு பெரிய மரங்கள் காணப்பட்டன. அவ்விரண்டு விருக்ஷங்களின் கிளைகள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருந்தன. அதைப் பார்க்கும் மாந்தர்கள், பிலேமோனும் அவனது மனைவியும் எவ்வாறு ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாது இணங்கி வாழ்ந்திருந்தனரோ, அதற்கு அறிகுறியாக அவ்வாறே இவ்விரு மரங்களும் கிளைகளால் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு இணைந்து இருக்கின்றன என்று கூறுவது வழக்கம். அவர்களுக்கு இத்தகைய பேறு கிடைத்தற்குக் காரணம், அவர்கள் விருந்தினரை உபசரித்து வந்த பரோபகாரமே ஆகும்.

" நாயாய்ப் பிறந்திடின் நல்வேட்டை யாடி நலம்புரியும்
தாயார் வயிற்றில் நரராய்ப் பிறந்துபின் சம்பன்னராய்
காயா மரமும் வறளாங் குளமும் கல்லாவு மன்ன
ஈயா மனிதரை யேன்படைத்தாய்! கச்சி யேகம்பனே! "

—பட்டினத்தடிகள்

## 16. கருதாமற் கருமங்கள் முடிக்கவேண்டாம்

முன்னொரு காலத்தில், நீர்வள நிலவளங்களில் மிகுந்து விளங்கிய ஆர்க்கேடியா என்னும் தேசத்தில், ஜேஸஸ் என்ற வேந்தன் அரசாண்டு வந்தான். அவனது நாட்டில், பலவிதத் தானியங்களும், பற்பல தீஞ்

சுவைக் கனிகளும், பலவகையான புஷ்பங்களும் நிறைந் திருந்தன. அவனுடைய அரசாட்சியில் குடிகள் மிகுந்த சந்தோஷ முடையவர்களாய், மனத்தில் கவலை யற்றுச் சுகமாகக் காலங்கழித்து வந்தார்கள். ஆனல், அரசன் தனக்குச் சந்ததி யில்லையே யென்ற கவலை நிரம்பியவனய் வருத்தம் அடைந்திருந்தான்.

சில நாள் கழித்துக் கடவுளின் அருளால் அரசி கருப்பங்கொண்டு ஓர் பெண்மகவைப் பெற்ருள். தனக் குப் பின்னர் பட்டத்திற்கு வரப் புத்திரன் பிறக்க வில்லையே யென்று கவலைகொண்டிருந்த காவலனுக்குப் புத்திரி பிறந்தனள் என்பதைச் செவியில் கேட்கவும் பிடிக்கவில்லை. பின்பு அவன், அக் குழந்தையினிடம் வெறுப்புக்கொண்டு அதற்கு அத்லாந்தா என்று நாம கரணஞ் செய்தான். வெறுப்பின் மிகுதியால் அதைப் பார்க்கவுஞ் சகியாது பணியாட்களிடம், மனித சஞ் சாரமில்லாத ஓர் காட்டில் அக் குழந்தையைக் கொண்டு போய் விட்டுவிடும்படி கூறினன். அவர்களும் 'மன் னன் வாக்குக்கு மறுவாக்கு உண்டோ' என்று நினைத்து அவனது கட்டளைப்படியே அதை வனவிலங்குகள் வசிக்கக் கூடிய ஓர் மலைநாட்டில் கொண்டுபோய் விட்டு விட்டார்கள்.

அந்தக் குழந்தை அதிக அழகு உடையதாய்க் காண்பவர் கண்ணைக் கவரத்தக்கதா யிருந்தது. அரசன் அக் குழந்தையின் அழகை முன்னமே பார்த்திருந் ததனல், அதன் உருவம் அவனது மனத்தைவிட்டு அகலவே யில்லை. அன்னையிடமிருந்து பார்த்த போது அந்தச் சிசு அழுத அழுகையும், அவனது மனத் தில் பச்சைமரத்தில் ஆணியடித்தது போல் நன்கு

பதிந்திருந்தது. 'ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு' என்றபடி, தான் ஆலோசியாது வெறுப்பினால் அக் குழந்தையை அப்படிப்பட்ட கொடிய வனத்தில் விட்டு விட்டு வரும்படி ஏவியதைப் பற்றி மிகவும் வருந்தினான்; அந்தச் சிசுவைப் பார்க்கவேண்டும் என்றும் நினைத்தான்; அதைக் காணப் பலவிடங்களிலும் தேடினான்; அதை அநேக இடங்களில் தேடிப் பார்த்தும் காணக் கிடைக்கவில்லை. ஆதலின் அக் குழந்தை, ஒருகால் இறந்துபோயிருக்கக் கூடுமென்று எண்ணி ஆறுத்துய ரத்தில் ஆழ்ந்தான்.

காப்பவர் அற்றுக் கானகத்தில் கொடிய விலங்குகளிடையில் தனியே விடப்பட்ட பால்மணம் மாறாத அச்சிசுவை, ஒரு பெண்கரடி எடுத்துக்கொண்டு போய்த் தனது குகையில் வைத்தது. அது தனது குட்டிகளுடன் அத்லாந்தாவுக்கும் பாலூட்டிச் சீராட்டி வளர்த்தது. அத்லாந்தாவும் அசாதாரணமான தோழர்களுடன் விளையாடிக் காலங் கழித்து வந்தாள். ஒருநாள், அவ்வழியிற் சென்ற இடையனொருவன், அத்லாந்தாவைப் பார்த்து ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்து, அவளைத் தனது மனைக்கு அழைத்துச் சென்றான்; அவளை நன்றாய்க் காப்பாற்றியும் வந்தான்.

இளமையிலேயே அவள் மிக்க அழகு உடையவளாக விளங்கினாள். வேகமாக ஓடுவதில் அவளுக்குச் சமமானவர் எவரும் இல்லை. தைரியமாய் விரைந்து ஓடக்கூடியவளா யிருந்ததால் அவள், ஆடவருடன் சென்று வேட்டையாடி வந்தாள். ஒரு சமயத்தில், அந் நாட்டிற்குள் ஒரு கரடி வந்து ஜனங்களைக் கொன்று துன்புறுத்தியது. அதைச் செவியுற்று அநேகர்

வேட்டை யாடுவதற்காகப் புறப்பட்டார்கள். அத்லாந்தாவும் அவர்களுடன் சென்றனள். அக் கொடிய கரடியைப் பின்பற்றி ஓடினவர்களில் இச் சிறுமிதான் முன் சென்று அதைக் காயப்படுத்தினாள்.

அப்பொழுது தற்செயலால் அங்குச் சென்றிருந்த ஜேஸஸ் என்னும் வேந்தன் அவளைப் பார்த்தான். அவள்தான், முன்பு இழந்துவிட்டதாகக் கருதிய தனது அருமைக் குழந்தைதான் அவளென்று தீர்மானித்தான். பிறகு அவன் மிக்க சந்தோஷத்துடன் அவளருகிற் சென்று, அவளுடன் பேசி, அவளைத் தனது அரண்மனைக்கு அழைத்துச் சென்றான்.

அவள் அரண்மனையை யடைந்து, அங்குப் பல வேலைக்காரர்கள் குற்றேவல் செய்யக் காத்திருந்தபோதிலும், சிறந்த அழகான ஆடைகளைத் தரித்துக்கொண்டு அரச குமரிபோல் காலங்கழிக்கும் விஷயத்தில் திருப்தியடையவில்லை. ஆகையால், அவள் பல தடவைகளில் மனவாட்டம் உடையவளாய்க் காணப்பட்டாள். அவளுக்குச் சாதாரண மனிதராகிய இடையர்களோடு வசித்து வந்த வாழ்வே சந்தோஷத்தைத் தந்தது. அரண்மனைக்கு வந்தது முதல் அவள் அங்குப் பாடுவதுமில்லை; ஆடுகிறதுமில்லை. அவளிடம் பல பெருமாட்டிகளும் பிரபுக்களும் பேசுவதற்காக வந்தால், அவள் ஓடி ஒளித்துக் கொள்வாள். ஒருகால், அரசன் அவர்களுடன் உட்கார்ந்து பேசவேண்டுமென்று வற்புறுத்தினால், அவள் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு தலைமயிரை அவிழ்த்து முகத்தை மூடிக்கொள்வாள்.

அரண்மனைக்கு வருகிற வாலிபப் பிரபுக்களில் பலர், அவளை மணஞ் செய்துகொள்ள விரும்பினார்கள்.

சிலர் அவளை அணுகித் தங்களுடைய அன்பை வெளியிடலாமெனப் பிரயத்தனப்பட்டும், அது முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டாற் போல் கிட்டாதாயிற்று. அவள் ஒருவருடனும் பேச உடன்படுவதில்லை. பேசுமாறு நிர்பந்தப்படுத்தப் பட்டால் ஓடி மறைவாள். வாலிபர்கள் அவளது இயற்கையை அறியாதவர்களாய் அவள் தங்களை இழிவாக மதிப்பதாக நினைத்து வேந்தனிடம் குறை கூறுவார்கள். அரசன் அவர்களை நோக்கித், தனது குமாரி பெண்களுக்குரிய அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்கிற நான்கு குணங்களையும் சுபாவமாக வுடையவளாகையால், பிறரிடம் உரையாட வெட்கப்படுகிறாள் என்று சமாதானமாகக் கூறுவான். மேலும் அவன், தனது மகளுடன் பேசி, அவ்விளைஞர்களுள் ஒருவனை அவள் மணந்து கொள்ளும்படி ஏற்பாடு செய்வதாகவும் அவர்களுக்கு வாக்குறுதி செய்வதும் உண்டு.

இவற்றை யெல்லாம் செவியுற்ற அத்லாந்தா வருத்தமுற்றுத் தன்னால் அவ்வாறு விவாகம் செய்து கொள்ள முடியாது என்று புலம்புவாள். ஒருநாள் வேந்தன் சிறிதும் கோபமடையாமல் அவளைப்பார்த்துக், "குழந்தாய், நீயோ ஓடுவதில் கீர்த்தி பெற்றவள். ஆகையால், உன்னை யார் விவாகம் செய்துகொள்ள விரும்புகிறார்களோ, அவர்கள் உன்னுடன் பந்தய ஓட்டத்தில் நின்று ஓடவேண்டும். அந்தப் பந்தயத்தில் எவன் உன்னை வெல்லுவானோ, அவனையே நீ கலியாணஞ்செய்து கொள்ளலாம். எவனும் உன்னை ஜெயிக்காவிட்டால் நீ விவாகமில்லாமல் சுயேச்சையாய்க் காலங் கழிக்கலாம்" என்று நயமாகக் கூறினான். அவளும் ஒரு

வரும் தன்னை வெல்லமுடியாது என்ற தீர்மானங் கொண்டவளானதால், பரிகாசச் சிரிப்புடன் "அவ்வாறே ஆகட்டும்" என்று பதிலுரைத்தாள்.

பின்பு அந்தக் காவலன், தனது மகளை மணஞ்செய்வித்தற் பொருட்டு, பந்தய ஓட்டத்தில் ஓட விரும்புகிறவர்கள் ஊக்கத்தோடு ஓடும்படியாகவும், அதில் வெற்றி யடைந்தவனுக்குத் தனது புத்திரியை கொடுப்பதாகவும், தோல்வி யடைந்தவன் தனது தலையை இழக்க நேரிடுமென்றும் பறை சாற்றுவித்தான்.

அவனது அழகில் ஈடுபட்ட அநேக இளைஞர்கள், ஏற்படுத்தியுள்ள நிபந்தனை மிகவும் கடினமானதென்று அறிந்திருந்தும், பந்தய வோட்டத்தில் அவளை வெல்ல முன் வந்தார்கள். ஒவ்வொருநாளும் பந்தயவோட்டம் நடந்தது. அதில் அத்லாந்தாவே வெற்றி யடைந்தாள். தோல்வி அடைந்த வாலிபர்கள் உடன்படிக்கையின் படித் தலையை இழக்கும்படி ஏற்பட்டது. அத்லாந்தா தான் வெற்றியடைந்ததனால் சந்தோஷம் அடைந்த போதிலும், பல வாலிபர்கள் உயிர் துறக்கும்படி நேரிடுகிறதே யென்று மனம் வருந்தினாள். பின்பு அவள் தனது தந்தையைப் பார்த்து, அவ்வாறு தோல்வி யடைபவர்களைக் கொல்லாது விட்டுவிடும்படி கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். அவளது தாதையோ சிறிதும் அவளது வேண்டுகோளுக் கிணங்காது அவர்களைத் தலையிழக்கும்படி செய்து வந்தான்.

ஒருநாள், அப்பெண்மணியை மற்றையோர் காதலித்ததைப் பார்க்கிலும் அதிகமாய்க் காதலித்த மிலேனியன் என்னும் இளைஞன், அத்லாந்தாவை எவ்வாறாயினும் வென்று விவாகஞ் செய்து கொள்ள விரும்பினான்;

அவளும், தன்னைக் காதலிக்கிறாள் என்பதைக் குறிப்பாக அறிந்து கொண்டான். ஆதலின், அவன் தான் தோல்வி யடைந்து தனது உயிரை இழக்க இஷ்டமில்லாது, அவளைத் தோல்வி யடைவித்தற்குரிய வழியைத் தேட ஆரம்பித்தான். தந்திரத்தினாலாவது வேறெவ் விதச் செய்கையினாலாவது அவளை வென்றுவிடக் கருதிய அவன், ஒலிம்பஸ் என்னும் மலையில் வசிக்கும், காதலுக்கு அதிதேவதையாகிய வீனஸ் என்ற தேவனை யணுகி, தனக்கொரு வரத்தை அளிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். அத்தேவனும், அவனது வேண்டுகோளுக்கிரங்கி, அழகிய மூன்று பொன் மாம்பழங்களையும் கொடுத்து, அவைகளை உபயோகிக்க வேண்டிய விதத்தையும் கூறி ஆசீர்வதித்து அனுப்பினான்.

அவ்வரத்தைப் பெற்று மனமகிழ்ந்து, அந்த வாலிபன் உடனே விரைந்து சென்று, இராஜ சமுகத்தை யடைந்தான். அங்கு அரசனிடம் தான் அந்தலாந்தாவுடன் பந்தய வோட்டத்தில் ஓட வந்திருப்பதாகக் கூறினான். அரசன் அவனை நோக்கி, "நீ தோல்வியடைந்தால் உன்னுடைய உயிரை இழக்கும்படி நேரிடும்" என்று சொன்னான். அதற்கு வாலிபன் கம்பீரமான குரலோடு "நான் உம்முடைய மகளைப் பந்தயத்தில் வென்று மணஞ் செய்து கொள்ளாமல் பூமிக்குப் பாரமா யிருப்பதைவிட எனது உயிரை இழப்பதையே மேன்மையாக கருதுகிறேன். நான் வெற்றியடையக் கூடும் என்றும் உறுதியாக நம்புகிறேன்" என்று பதிலுரைத்தான்.

இவ்விதமான பதிலைக் கேட்டதும் வேந்தன், சந்தோஷத்தை யடைந்தவனாய், அவனைப் பந்தய சாலைக்கு